Pr

□ Mouna Mayakkangal (Story Poem)
□ Author : SIRPI □ Art : Sellam, Arumugam
□ First Edition - July 1982 □ Pages 112
□ Publisher : Kolam Veliyeedu, 60, Alagappa Lay-out, Pollachi-642001 □ Sales rights: Annam Private Ltd, Sivan koil South Street, Sivagangai-623560 □ Printer : Sirpi Printers, Pollachi □

# என்னுரை

இது-

என் இனிய நண்பன் ஒருவனின் அந்தரங்கமான வாழ்க்கைக் கதை.

பலப்பல ஆண்டுகளாக இந்தக் கதை என் மனதுக்குள் அலைமோதிக் கொண்டிருந்தது. கவிதைச் சிறகுகள் தந்து இப்போது நான் அதனைப் பறக்க விடுகின்றேன்.

□

கதைக் கவிதைகள் பலவற்றை நான் முன்னர் எழுதியிருந்த போதிலும் உணர்ச்சி தரங்கமிடும் காதல் கதையைப் புதுக் கவிதையில் ஆக்கும் முயற்சியில் கடும் சோதனைகளுக்கு உள்ளானேன்.

இந்தக் கதையை முடித்துப் பேனாவை மூடி வைத்த போது கடலிலிருந்து கரை சேர்ந்த நிம்மதி எனக்கு.

□

காதல் உணர்ச்சியைக் கத்தி முனையில் நடப்பது போல் வெகு கவனத்தோடு கையாண்டிருக்கிறேன்.

ஆனாலும் ஒரு கேள்விக்கு நான் பதில் சொல்லியாக வேண்டும் - விலைமகள் ஒருத்தியைக் கதை நாயகி யாக்கிக் காதல் நாயகியாக்கியது குறித்து.

பரத்தைமை என்ற மாருத சாபத்திலிருந்து பெண் குலம் விடுதலை அடைய முடியாதபடி பற்றிப் படர்ந் திருக்கும் இன்றைய சமூகச் சூழ்நிலை ஏற்படுத்திய

சலனங்கள் தான் இந்தக் கதையின் 'அவனும்' 'அவளும்'.

தீர்வு அல்ல - தீர்வை நோக்கிய பயணம் இந்தக் காவியம்.

□

அணிகளை அதிகம் நேசிக்காத என் கவிதைக்கு முன்னுரை என்னும் முத்திரை மோதிரம் சூட்டியிருக்கிறார் என் இனிய தோழர் கவிஞர் மீரா.

இந்தக் காவியக் கதவுகளைத் லாவகமாகத் திறக்க வைக்கும் தங்கச்சாவி கவிஞர் மீராவின் முன்னுரை. இலக்கியமே வாழ்க்கையாக விளங்கும் இனியவருக்கு என் நன்றி.

எளிய அச்சகத்தில் அருமையாக உருவாக்கித் தந்த சிற்பி அச்சக உரிமையாளர்களுக்கும் ஊழியர்களுக்கும் என் அன்பும் நன்றியும்.

5—7—82 **சிற்பி**

# காதல்...
# சூரியனைப் போல்
# சுத்தமானது

கவிஞர் *மீரா*

அன்று-

சட்டமன்றத்தில் தேவதாசித் தடைச் சட்டம் வந்தபோது ஓநாய்கள் அழுதன, ஆடுகள் நனையப் போகின்றனவே என்று!

'ஆண் சாதியின் ஆசை அளவுக்கு அதிகமாகும் போது அதற்கொரு வடிகால் வேண்டாமா? அந்த அளவுக்கு அதிகமான ஆசையை எதிர்கொள்ளவென்று ஒரு பகுதிப் பெண்கள் இல்லையென்றால் சமூகம் என்ன ஆவது? அது குடும்பப் பெண்கள் மீதல்லவா பாயும்? மொத்தச் சமூகம் பாழாவதற்குப் பதில் ஒரு பகுதி பாழாகலாமே. அதனால் பாதகம் ஒன்றும் இல்லையே!' -இப்படிப் புலம்பின சில.

'உலகத்தின் பழமையான தொழிலே (Oldest Profession of the world) அது தானே' என்று பிலாக்கணம் பாடின இன்னும் சில.

பழம் பெருமை உடைய தமிழகத்தில் இந்தப் 'பழந்தொழில்' மட்டும் இல்லாமல் இருந்திருக்க முடியுமா என்ன? இருந்தது. உடல் விலை வணிகப் பெண்கள் எங்கணும் நீக்கமறப் பரவி இருந்தனர்... அப்படிப் பரவி இருந்ததால் தானோ என்னவோ 'பரத்தையர்' ஆயினர்.

நிலப் பிரபுத்துவத்தின் முகத்தில் படர்ந்த பரத்தைமைத் தொழுநோய் இந்தப் 'பாருக்குள்ளே நல்ல நாட்டில்' மட்டுமல்ல, பூமண்டலத்தின் எல்லாப் பகுதிகளிலுமே தொற்றிக் கொண்டிருக்கிறது.

பெரும் பகுதிப் பெண்களின் கற்பை 'இன்சூர்' செய்வதற்காக ஒரு சிறு பகுதிப் பெண்கள் தங்கள் உடலை விற்றுப் 'பிரிமியம்' செலுத்தும் கொடுமை தொடர்ந்து கொண்டிருக்கிறது.

காலங்காலமாய் ஒட்டியிருக்கும் இந்தக் களங்கத்தைத் துடைக்க - கறையைப் போக்க அவ்வப்போது சிலர் அவதரிக்கிறார்கள்.

மேரி மக்தலேனாவை மன்னித்து அருள் பாலிக்க ஒரு ஏசு வந்தார்.

'மதவெறியரின் வெறிச் செயல்களுக்குப் பலியான மங்கையரை ஏற்றுக்கொள்ளுங்கள் என்னருமை இளைஞர்களே!' என்று துணிந்து சொல்ல ஒரு மகாத்மா வந்தார்.

இங்கே ஒரு மகாத்மாவை-

'அழுக்கின் ஒரு துளி தூசும்
படியாத
ஓர் ஆத்மா'வைக்

கரை சேர்க்கும் ஒரு மகாத்மாவைச் சாமான்ய மனிதர்களிடையே அவதரிக்க வைக்கிறார் என் மரியாதைக்குரிய கவிஞர் சிற்பி.

□

சிற்பியின் 'நெஞ்சின் சுமை' இறக்கி வைக்கப்பட்டுள்ள இந்த 'மௌன மயக்கங்களின்' 'அவன்' 'முதல் தேதிப் பரபரப்பில் பை கனத்த கனவான்'

அவள் 'ஜீவனையே சிலிர்க்க வைக்கிற ஆச்சரியம்' 'பருவம் சிங்காரித்த பதுமையாய்' இருந்த அவளைத் 'தெருவில் விற்கும் பலகாரக் கூடையை ஈ மொய்ப்பது போல்' கண்கள் மொய்க்கின்றன.

காலம் அவளை இரவுச் சந்தைக்கு இழுத்து வருகிறது. அங்கே அவளை பெண் பார்க்க வருகிருன் அவன். கண்டதும் அவனுள் 'எலக்ட்ரிக் கிதாரின் இன்ப அதிர்ச்சிகள்'. இளமைத் திமிரில் வாடகை பேசி ஒரு 'புது பார்ட்டி'யாக வருகிற அவனும் கற்புக்குக் கடை திறந்து காத்திருக்கும் அவளும் முதலில் சந்திக்கும் இடம் மோகத்தின் அடிவாரம்...

'மோக...மோகம்...மோகம்'

இருவரும் சென்றடைவதோ - சேர்ந்து தொடுவதோ தெய்வீகக் காதலின் சிகரம்.

மோகம் தானே காதல் மாளிகையை திறக்க உதவும் திறவுகோல்!

மோகத்திலிருந்து
நம்மைக்
காதலுக்கு அழைத்தது
எந்த நாள்?
எந்தப் புனிதப் பொழுது?

என்று அவன் கேட்கும் போது நாம் உணர்ச்சி வசப் படுகிறோம்.

முதலில் அவர்கள் சேர்க்கை

நெகிழ்ந்த சேறும்
முரட்டு விதையும்
ஒன்றில் ஒன்று
உறவு கண்டது போல'

அருவருப்பாகத் தோன்றுகிறது. பிறகு அதில் ஆயிரங் காலத்துப்பயிர் - தேவமணிப் பயிர் செழித்து வளர்வது தெரிகிறது.

இருவரும் சிரிக்கிறார்கள்.
'சிரிப்பும் சிரிப்பும்
பெருக்கெடுக்கும் போது
தரையில் நழுவி விழுந்தது வானம்'

என்கிறார் சிற்பி.

ஓ... வானம் கடந்த அண்ட வெளியில்-மேனிச் சுகம் கடந்த ஞானவெளியில் இருவரும் சிறகடித்துப் பறக்கிறார்கள்.

நாம் பரவசப்படுகிறோம்.

□

அனடோல் பிரான்ஸின் நோபல் பரிசு பெற்ற நாவல் 'தாசியும் தபசியும்'. பாவச் சகதியில் புரண்டு கொண்டிருந்த தாசி தாயிஸைக் கரை சேர்க்க முயன்று வீழ்ந்து விட்ட துறவி (பாப்னூடியஸ்) ஒருவரின் கதை அது. தாயிஸைத் 'திருத்தப் போகிறேன்' என்று புறப்படும் பாப்னூடியஸைப் பார்த்து இன்னொரு துறவி புத்தி சொல்கிறார்.... 'தரைக்குப் போகும் மீனின் கதிதான் ஆசிரமத்தை விட்டுப் போகும் உனக்கு நேரும்' என்று தடுக்கிறார்... முடியவில்லை. விரைவில் தாயிஸ், பாப்னூடியஸை ஆட்கொண்டு விடுகிறாள்.

''தாயிஸ்! நான் உன் கூந்தலை அலங்கரிக்கும் மலராக இருக்கக் கூடாதா? உன்னுடைய அழகிய உடலை மூடியிருக்கும் உடையாக இருக்கக் கூடாதா? சிங்காரக் கால்களில் அணிந்திருக்கும் செருப்பாகவாவது இருக்கக் கூடாதா? என்னை உன் காலடியில் போட்டுக் கொள். எனது உடலை உடையாகப் போர்த்திக் கொள்... வா கண்ணே! என் வீட்டுக்கு வா!''

என்று அந்த தேவதேவியிடம் விப்ரநாராயணராக வீழ்கிறார். தாசியைக் கைதூக்கிவிடப் போய் புதை சேற்றில் அங்குலம் அங்குலமாக மூழ்குகிறார். பாவம் தபசி!

சிற்பியின் 'அவன்' தபசியைப் போல் ஆரவார மாகப் புறப்படவில்லை; அடி சறுக்கி விழவும் இல்லை.

'அவள்' மீது அவனுக்கு இரக்கத்தைக் காட்டிலும் 'சூரியனைப் போல் சுத்தமான' காதல் இருக்கிறது. 'ஒழுக்க வாதங்கள், அடுத்த மனிதரின் அலட்சிய ஏளனங்கள்' பற்றியெல்லாம் அவனுக்கு கவலையில்லை. உண்மையில் அவள் அவனுக்குத் தேவை. அவன் வெளிப்படையாகப் பேசுகிறான்.

'அவளைக் காப்பாற்றுவது
என்ற லட்சியமெல்லாம்
எனக்கில்லை.
என்னையே நான்
காப்பாற்றிக் கொள்ள
அவள் வேண்டும்'

எவ்வளவு திடமாக-தீர்மானமாகத் தன் உள்ளத்தைத் திறந்து காட்டுகிறான்.

'எரிகின்ற விளக்கைப் பழம் என்று எண்ணி விட்டில் விளக்கில் விழுமே, அது மாதிரி...' என்று யாரும் அவனிடம் பீடிகை போட்டுப் பேச முடியாது.

'அந்த அங்க லாவண்யமே
ஒரு தீக்கொழுந்து
அதில்
சிறகுகள் கரிய
சிற்றுடல் எரிய
அதன் மயமாகும்
ஈசல் நான்-
பேசப் பிறகு என்ன இருக்கிறது?'

என்று நிமிர்ந்து நிற்கிறான்-ஒரு கூரிய வாள் போல். நமக்கு, பேசப் பிறகு என்ன இருக்கிறது?

ஆனாலும் அவன்-

ஈசலாகித் தீசலாகப் பொசுங்கிப் போய் விடாமல் புடம் போட்ட பொன்ஞய் - உறுதி மிக்க உருக்காய் மாறுகிருன்.

'எமன் வீட்டு வாசலேயும்
உனக்காகத் தட்டுவேன்'

என்று கூறும் அவன் அவளுக்காகத் தன் வீட்டுக் கதவைத் திறக்கிருன். அவனும் அவளும் அலேயும் அலேயுமாய். சொர்க்கம் அவர்களேச் சுற்றி வருகிறது.

நீசச் சமூகம் விடுமா?

அவள் அவனுக்காக வீரமரணம் அடைகிருள்.

அவன் - அவள் மரித்த பிறகும் வாழ்கிருன்.

அவளுக்காக-அவளேப் போன்ற ஆயிரம் ஆயிரம் பாவப்பட்ட பெண்களுக்காக - அவர்களுக்கு விடிவு காண... மூடச் சமூகத்தின் முடை நாற்றம் போக்கி ஒரு முடிவு காண...

மயக்கங்களில் எரிந்து கரிந்து புகைந்து போகாமல் விமோசனம் தேடும் இயக்கங்களில் சங்கமித்து நிற்கிருன் - ஒரு நெருப்புச் சுடர் போல்!

□

மௌன மயக்கங்களின் கதை பழைய கதைதான். பழக்கப்பட்ட - பலரும் தொட்ட கதைதான்.

எனினும் இந்தக் கதையில் நின்றுகொண்டு கவிதைக் கரம் நீட்டி யாரும் தொடாத மலேமுகடுகளேத் தொட்டிருக்கிருர் சிற்பி.

சிற்பியின் 'அவள்' சிலப்பதிகார மாதவி தான். சிலப்பதிகாரத்தில் மாதவியின் விரகதாபம் விவரிக்கப் பட்ட அளவு சமுதாய நிர்ப்பந்தங்களுக்கு ஆளான அவள் வேதனேகள், அடிமனத்துயரங்கள், ஆழமான வடுக்கள் வெளிக்காட்டப்படவில்லே.

'என்ன கவி இந்த
இளங்கோ உரைத்த கவி'

என்று மாதவிக்காகக் கண்ணதாசன் செல்லமாகக் கோபித்துக் கொண்டது கூட சரியாகவே படுகிறது.

கண்ணதாசன் இப்போதிருந்தால் மாதவியின் மனக்குமுறல் சிற்பியின் 'அவள்' மூலம் வெளிப்பட்டிருப்பதைப் பார்த்து ஆறுதல் அடைந்திருப்பார்.

மாதவியின் தாய் சித்ராபதி எப்படி அந்தக் கடை திறக்கத் துணிந்தாள்?

'அம்மா நகைகளை விற்ருள்
அப்புறம் காய்கறி விற்ருள்
தலையில் சுமந்து விறகு விற்ருள்
பிறகு
கற்பை விற்ருள்
எங்களுக்குக்
கால் வயிறு நிரம்பியது'

என்று சிற்பியின் வார்த்தைகளால் சுடும்போது சித்ராபதியுங்கூட முதலில் கஜானு நிரம்ப அல்ல-கால் வயிறு நிரம்பவே கடை திறந்திருப்பாள் என்று தெரிகிறது.

முதல் நாள் போருக்கு நாயகனை அனுப்பி, போனவன் வராமல் புகழ்க் காவிய நாயகன் ஆனதறிந்து மறுநாள் நெற்றியில் திலகமிட்டு வெற்றியுடன் திரும்பி வா என்று மகனை அனுப்பிய வீரத்தாய் போல முன்னமே சோரம் போன தாய் இரவுச் சந்தைக்கு மகளை அனுப்புகிருள்.

இது சிலப்பதிகாரம் முதல் சிற்பியின் காலம் வரை மாதவிகள் வளர்ந்த கதை...

இந்த மாதவிகள் தங்கள் பூர்வாசிரமப் பெயரைக் கூடச் சாமான்யமாகச் சொல்லமாட்டார்கள்- சாமியார்களைப் போல!

மதுரையில் ஒரு பெயராம்! காஞ்சியில் ஒரு பெயராம்! காசியில் ஒரு பெயராம்!

தெய்வநிலைக்கு உயர்த்திக் காட்டுவதைப் போல் அவர்களைக் கேவலப்படுத்திய சமூகத்தின் முகத்திரையைக் கிழித்துக் காட்டுகிறார் சிற்பி.

'இந்த வியாபார சமூகத்தில்
நீ விற்பனைப் பொருளானதில்
ஆச்சரியமில்லை'

என்று சமூகத்தின் தடித்த தோலில் சாட்டையை வீசுகிறார் சிற்பி.

□

இப்போதெல்லாம் 'நாடகத்தில் காவியத்தில் காதல் என்றால் நன்றாம்' என்று சொல்வது கூட நாகரிகக் குறைவு என்று நினைக்கிறார்கள் சில மெத்தப் படித்த மேதாவிகள்.

காதலா... அது ஆகப் பழைய விஷயம்.. அலுத்துப்போன விவகாரம் என்று முகஞ்சுளிக்கிறார்கள். சில விவேக சூடாமணிகள்.

காதல் ஆகப் பழையது தான். எனினும் அன்று அன்று புதுமையாய் மணங்கமழ்வது - ஒரு மலரைப் போல!

காதல் மிகமிகப் பழையதுதான். ஆனாலும் என்றென்றும் உயிர் இயக்கும் ஆற்றல் உடையது-காற்றைப் போல!

சிற்பிக்கு இந்த உண்மை தெரியும்...

எவ்வளவு ஆனந்தமாய் அந்த ஆதிகாலத்து ஒரிஜினல் நெய் மிட்டாயைச் சுவைக்கிறார்...சுவைக்கக் கொடுக்கிறார்...

ஈருடல், ஈருயிர் இணையும்போது ஈருடல் ஒருயிர் என்றாகிறது...

அதாவது ஈருயிர் இரண்டறக் கலந்து ஒரே உயிராகும் பிரயத்தனம் தான் காதல் என்ற அர்த்த மாகிறது.

எப்படிச் சொன்னாலும் - ஜீவாத்மா பரமாத்மா வோடு கலக்கத் துடிதுடிக்கிறது என்று சொன்னாலும் கூட - ஈருயிர் தான் ஒருயிராகிறது என்று உணர்த்தப் படுகிறது.

சிற்பி இங்கே வித்யாசப்படுகிறார்.

காதலர் இருவர்க்கும் இருப்பது ஒரே உயிர் தானாம். உயிரின் ஒரு பகுதி அவன்... மற்றொரு உன்னதமான பகுதி (better half) அவள்.. ஒரு பகுதி மற்றொரு பகுதியைத் தேடி அடையத் துடிப்பது தான் பரிசுத்தமான காதல் என்கிறார்.

'தன் மற்றொரு பகுதியைத்
தேடித் திகைக்கும்
உயிரின் தவிப்பு...'

காதல் ஆகப் பழையதுதான்...ஆனால் சிற்பியின் உளி பட்டு அது எத்தனை மாயச் சிற்பமாய் ஒளிவீசுகிறது!

கிரேக்கக் கவிஞன் ஹெஸாய்டு (Hesoid) சொன்னான், 'முதலில் பாழ்வெளி (Chaos) படைக்கப் பட்டது... அடுத்து பூலோகம் படைக்கப்பட்டது... அதற்குப் பிறகு காதல் படைக்கப்பட்டது' என்று!

பூலோகத்தில் சொர்க்கத்தைப் பார்க்கவேண்டும் என்று பலரும் ஆசைப்படுகிறார்கள்.

அவர்கள் எல்லாம் வேகமாக, அதிகமாக, ஆழ மாகக் காதலிக்க வேண்டும்!

காதல் தான் சொர்க்கத்தை பூமிக்குக் கொண்டு வரும் மந்திரம்.

சிற்பிக்கு இந்த ரகசியம் தெரியும்

எவ்வளவு சுகமாய்ச் சொல்லுகிருர்...

''மனித சுவாசங்களில்
இத்தனை சுகந்தமா?
வியர்வையில் இத்தனை நறுமணமா?
ஓ
சொர்க்கம்
பூமியில்தான்! பூமியில்தான்!''

□

காதலிக்கவும் உழைக்கவும் முடிந்தால் தான் ஒருவன் நல்வாழ்க்கை நடத்த முடியும் என்கிருர் மகான் டால்ஸ்டாய்.

''காதலிப்பதற்காக உழைப்பு
உழைப்புக்காகக் காதல்''

என்ற அவரது மணிவாசகம் என்னைக் காந்தமாய்க் கவர்ந்திருக்க வேண்டும். அதன் பாதிப்பாலோ என்னவோ

''நீ எனக்குக் காதலைத் தந்தாய்
அது உழைப்பாளியின் வியர்வையைப் போல்
உயர்வானது''

என்று 'கனவுகளில்' எழுதியிருக்கிறேன்.

''இது தர்ம சங்கடமான சிக்கல். இதை அவர் காதலியும் ஏற்றுக்கொள்ளமாட்டாள்; உழைப்பாளியும் ஏற்றுக்கொள்ளமாட்டான்'' என்று வெங்கட்சாமிநாதன் விமர்சித்திருந்தார்.

''ஏழை என்பதற்கு நீ
இனிமேல் பெருமைப்படு
ஏனெனில்
உலகத்தின்
எல்லாச் சுகங்களும்
இனி ஏழைகளுக்கே
சமர்ப்பணமாகப் போகின்றன''

என்ற சிற்பியின் வரிகளேயோ,

''திரும்பத் திரும்ப நான்
பார்க்கவும் கேட்கவும்
அறவே விரும்பாத
(அவையும்) இரண்டு:

ஒன்று
என் வளநாட்டின்
தீரா வறுமை
இன்னென்று
உன் தரிசனம் பெருத
வாழ்வின் வெறுமை''

என்ற மொழிகளேயோ படித்தால் நிச்சயமாகச் சாமிநாதனுக்கு தர்மசங்கடமாகத் தான் இருக்கும். காதலர்களுக்கு உதவுவதற்காக சிற்பி ஒரு 'தோழரை' வேறு வரவழைத்திருப்பதைப் பார்த்தால் சாமிநாத னுக்கு அதர்ம சங்கடமாகக் கூடத் தோன்றும்!

என்ன செய்வது?

சங்க காலத்திலிருந்தே சாமிநாதனே சங்கடப் படுத்த வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கும் போது நாங்கள் என்ன செய்வது?

பட்டினப்பாலேக் காதலில் கரிகாலன் நுழையும் போது சிற்பியின் பட்டணப் பாலேக் காதலில் ஒரு காம்ரேட் புகக்கூடாதா?

☐

உணர்வு தடுமாறும் என் கடைசி நாட்களிலும் கூட அந்த உயிரோவியம் செல்மாவையும் அந்த லெபனன் தேசத்துத் தேவகவி கிப்ரானையும் என்னல் மறக்கமுடியாது.

கிப்ரானின் முறிந்த சிறகுகளைப் போல் என் தாய்மொழியில் ஒரு வசன காவியத்தை - அமரகாவியத்தைப் படைக்க வேண்டும் என்று பல நாட்கள் பரபரத்திருக்கிறேன்... ஒரு நாள் ஆசையாய்ப் படைத்தும் பார்த்தேன்.

இதோ... சிற்பி ஊனுருக உயிருருக 'மௌன மயக்கங்களை'ப் படைத்துவிட்டார்...

சிற்பி ஜெயித்துவிட்டார்...

எனக்கு-

இன்னொரு 'ரவுண்டு' ஆடவேண்டும்!

☐

22—6—82



□

இந்தச் சுமையை
எத்தனை நாள் சுமப்பது?

என்றாவது ஒரு நாள்
இறக்கித் தான்
தீர வேண்டும்

யாரேனும்
இரக்கத்தால்
இறக்கி வைக்கத்

தோளின் சுமையல்ல
இது
நெஞ்சின் சுமை!

□

□

1

□

உனக்கும் எனக்கும்
ஏற்பட்ட உறவுக்கு
உலகம் அறிய
நான் பெயர் சொல்ல முடியாது!

ஆனல்
உனக்கும் எனக்கும்
ஏற்பட்ட பிரிவுக்கு
நான் பெயர் சொல்ல முடியும் –

அதன் பெயர்
வேதனை அல்ல சோகமும் அல்ல
கண்ணீர் அல்ல
மரணமும் அல்ல

நினைவுகள்-
அழியா நினைவுகள்!
நினைவுகள்-
அமர நினைவுகள்!

□

2

□

ஓ—!
களிப்பு நுரைக்
கோப்பையே!

உன்னை நான்
ஒரு சந்தையில்
கண்டெடுத்தேன்

ஆசையும் மோகமும்
வெறியும் வேதனையும்

பட்டப்பகலிலும் அலைமோதும்
அந்தப் பட்டினத்தின்
இரவுச் சந்தையில்...

ரோஜா மொக்குகள்
கண்களாய் அழைக்க
மௌன மந்திரம்
உதட்டில் சிலிர்க்க

நீ நின்ற திருக்கோலம்
என் நினைவுத் தோட்டத்தின்
நிரந்தர வசந்த காலம்!

நீ ஒளியின் வார்ப்பாக
இருந்தாய்

சந்தனப் பலகையில்
செதுக்கிய 'காஜுரஹோ'
சிற்பத்துக்கு
உயிர் வந்தது போல!

அன்று
நீ நின்ற திருக்கோலம்
என் நினைவுத் தோட்டத்தின்
நிரந்தர வசந்த காலம்

•

□

3

□

எனக்குத் தெரியும்...
நன்ருக்த் தெரியும்!

ஆவேச அனல் கொழுந்து விடும்
அரக்க உதடுகள்
இதயத்தின்
இருட்டுப் புழுக்கத்தோடு
உன் அதர விளிம்புகளைக்
கௌவிக் குதறிய கதை —

துயர நெசவுத்
தொடர் கதை
நான் அறியாததல்ல

ஆயினும்..ஆயினும்...
அவிழ்க்க முடியாத
புதிராய் விளைந்தது
இதுதான்:

சந்தைப் பொருள் நீ
என்று தெரிந்தும்

மதுர வைகறைப்
பொன் ஓடம் மிதக்கும்
அடிவானச் செக்கரின்
அழகு வளையங்கள்
எனக்கு
உன் அதரங்கள்!

☐

4

☐

இந்த வியாபார சமூகத்தில்
நீ
விற்பனைப் பொருளானதில்
ஆச்சரியமில்லை

வாடகை பேசும் துணிச்சல்
எனக்கு வந்தது தான்
ஆச்சரியங்களின் ஆச்சரியம்!

தேநீர்க் கடைச்
சிற்றுண்டிப் பொட்டலத்தில்
அழகிய கவிதை கிடைத்ததில்
விசித்திரமில்லை---

அதைக் கசக்கி எறிய
என் கரங்கள் துணிந்ததே
அதுதான்
விசித்திரங்களின் விசித்திரம்!

குப்பை கிளறும்
கோழியின் அலகில்
வைரமணியே அகப்பட்டது

கூரிய அலகால்
கொத்திக் கீறத்தான்
கோழிக்குத் தெரிந்தது

தரகன் சொன்ன
வார்த்தைச் சாகசம்
இப்படியொரு
தங்கச் சிலையாய்ச்
சமைந்து நின்ற போது

என்னுள்
எலக்ட்ரிக் கிதாரின்
இன்ப அதிர்ச்சிகள்

என்ன விலையானலும்
உனக்குக் கொடுக்க
ஆசைகள் கிளர்ந்த
அந்தக் கணத்தில்
நான் அறியாமல் போனது
ஒன்று உண்டு

நான்
தற்காலிகமாக
விலை கொடுத்து வாங்கியது
ஒரு பெண்ணின்
உடலை அல்ல

அழுக்கின் ஒரு துளி தூசும்
படியாத
ஓர் ஆத்மா

என் உயிரணுக்களில்
சங்கமிக்கப் போகிறது
என்ற
உண்மை தான் அது!

❑

5

❑

ஓட்டல் அறையின்
கதவு சாத்தப்பட்டதும்
'ஓ' வென்று மின் விசிறி
புயல் கிளப்பிக் கொண்டிருந்தும்

வியர்வையில் முழுகித்
தலை நிமிரமாட்டாமல்
தத்தளித்து நான்
தடுமாறிப் போனேன்

நீ என்னையே பார்த்தபடி
'மோனலிசா'
ஓவியமாக அமர்ந்திருந்தாய்

நான்
அவசரமாகத்
தண்ணீர்க் கூஜாவைத்
திறந்து
பரக்கப் பரக்கக் குடித்தேன்
நீ
மெதுவாகச் சிரித்தாய்!

பூக்களால் அர்ச்சனை
செய்கிறார்களாமே
புன்னகையால்
அர்ச்சிக்கப்படுவதை விட
அது
புனிதமானதா என்ன?

'வெட்கமா?' என்று
நீ என்னிடம் கேட்டபோது
நான் வெட்கத்தில்
நாணிக் குழைந்து போனேன்...

மெல்ல மெல்ல
உன்னை நான் நெருங்கியபோது
என்னிடம் மேலோங்கியது
மோக..மோகம்..மோகம்.

நீ
பளீரென்று சிரித்தாய்-
நானும் திடீரென்று சிரித்து விட்டேன்
சிரிப்பும் சிரிப்பும்
பெருக்கெடுத்த போது
தரையில் நழுவி விழுந்தது வானம்
திரைகள் கிழிந்து
தொலைந்தது மோனம்!

□

6

□

மோகத்திலிருந்து
நம்மைக்
காதலுக்கு அழைத்தது
எந்த நாள்?
எந்த புனிதப் பொழுது?
எந்தத் தேன்துளி நிமிடம்?

மழைத் தாரைகள்
நதியாய் நெளிந்தது எப்போது
என்றால்
மயில் பீலியில்'

வர்ணம் குழைந்தது எப்போது
என்ருல்
எப்படிச் சொல்ல முடியும்?
ஓ... அது
அப்படி நேர்ந்து போய்விட்டது

நடுத்தர வர்க்க நானும்
கற்புக்கு
கடைதிறந்திருந்த நீயும்
ஏன் இப்படிக்
காதல் பம்பரங்களாஞேம்?

பொங்கும் கடல் அலைக்குப்
பொழிப்புரை ஏது?
புன்னகைக்கு ஒரு
முன்னுரை தேவையா?
சங்கீத அருவியின் காலுக்கு
சலங்கை அவசியமா?

ஓ! அது அப்படி
நேர்ந்து போய் விட்டது!

வழக்கமில்லாத பழக்கம்
பொருத்தமில்லாத நெருக்கம்
முரண்பாடுகளின் இறுக்கம்

நெகிழ்ந்த சேறும்
முரட்டு விதையும்
ஒன்றில் ஒன்று
உறவு கண்டது போல!

□

7

□

வாகனங்கள்
சங்கிலித் தொடராய்
ஆரவாரித்துப் பறந்த
மாநகர்ச் சாலை

முதல் தேதிப் பரபரப்பில்
பை கனத்த கனவானாய்
நின்று கொண்டிருந்த என்னை
சௌக்யமா?'
என்று விசாரித்தது
ஒரு குரல்

குங்குமப் பொட்டும்
குழைந்த வெற்றிலையும்
குறுநகைப்புத் தூண்டிலும்
புது சிநேகிதமானாலும்
இதமாக அழைத்தன

'நீங்க தப்பா
நெனச்சுட்டீங்க..'
என்று நான் அணைபோடுமுன்
'என்ன அப்படிச் சொல்லீட்டிங்க
வாங்க போவலாம்..'
என்று
அன்பு வெள்ளத்தில்
ஆழ்த்தினான் அந்த மனிதன்

'எங்கே?' என்று
கேட்க நினைக்குமுன்
நாங்கள் இருவரும்
வாடகை வண்டியில்..!

'சிங்காரம் பிள்ளை தெருவுலே
தங்கம் சார் தங்கம்..
குங்குமப் பூவைப்
பாலிலே போட்ட மாதிரி
இருப்பா சார்.,!'

என் பழுதுபடாத இளமை
அச்சத்தை
அடிமனதில் செருகிக்கொண்டு
தானியத்துக்கு மூக்கை நீட்டும்
சோதிடக்காரனின் கிளிபோல்
சுக மயக்கிலாழ்ந்தது

உன்னைப் 'பெண் பார்க்க'
நான் வந்த கதை
இதுதான்!

☐

8

☐

அந்தி நேரத்து மின்சாரப் பூக்கள்
விரிந்து கொண்டிருக்கையில்

தயங்கித் தயங்கி
அந்த வீட்டுக்குள்
நுழைகிறேன்
நெஞ்சில் நடுக்கம்!
அச்சம்-மயக்கம்!

'வாங்க..வாங்க..!'
அரை மயக்க வரவேற்பிதழ்
வாசித்தது ஒரு
சிவந்த விழிப் புதர் மீசை...

'புது பார்ட்டி..' என்று
என் புது நண்பன்
அறிமுகம் செய்ததும்
'ஆங்.,. நம்ம கிட்ட
எப்பவுமே புதுச் சரக்குத்தான்!'
என்று உறுமினுன் அவன்.

திரைச் சீலேகளால்
ஜன்னலும் கதவும்
பத்தினி வேடம் பூண்டிருந்த
அடுத்த அறையில்
வியாபாரப் பொருள்கள்
அரைகுறை ஆடையில்!

என் அவசர ஆசை
உன்னேத் தேர்ந்தெடுத்தது

மற்ற பெண்கள்
உதடு பிதுக்கி
கழுத்தைச் சுளுக்கி
உள்ளே ஓடவும்

நீ மட்டும் என்னேப்
பார்வைத் தராசால்
எடைபோட்டு நகர்ந்தாய்...

'ஓட்டலுக்குக் கூட்டிப் போறதுன்ஞ
ரேட்டு அதிகமாச்சே..!
மெல்ல முனகினுன்
மீசைக்காரன்

ஒரு கரப்பான் பூச்சி
இருட்டுக்குள் ஓடியது

அருவருப்புடன் பணத்தை
உருவி எடுத்தேன்..
அவன் கண்களில்
மின் துளிர்கள்!

'லதாவெ காலேலே
அனுப்பிடுங்க சார்!
லதா! போயிட்டு வாடா,,,
அடிக்கடி வரணும் சார்...'

இப்போது நான்
லதாவின் காதலன்-
இல்லே..
இன்றைய கணவன்-
இல்லே..
ஒரு நாள் வருமானம்-
அதுவும் இல்லே
மானத்தைக் குலேக்க
வரு மானம்!

□

9

□

கை நிறையச் சம்பளம்
தருகின்ற நிறுவனத்தில்
நான் பணி புரிகிறேன்
ஆனாலும் உன்னே...

அடுத்தடுத்துச் சந்திக்க
ஆசை இருந்த அளவு
காசு போதவில்லே

ஒற்றை ரூபாய் குறைந்தாலும்
வெறி நாய் போல் புதர் மீசை
குரைத்துத் தொலைக்கிருன்

வாரம் ஒரு முறை
உன்னைப் பார்க்கா விட்டால்
இந்தப் பட்டினம் எனக்கு
காங்க்ரீட் சுடுகாடு
இயந்திரச் சந்தடி
செவிடர்களின் தலைநகரம்
குருடர்களின் கண் காட்சி!

எங்கள் அலுவலகத்தில்
எழில் மிகுந்த கன்னியர்கள்
அடக்க முள்ள அழகிகள்
எடுப்பாக உடுத்தும் பாவைகள்
பலருண்டு
நான் அவர்களை
ஏறெடுத்துப் பார்த்ததில்லை
அவர்கள் மத்தியில்
எனக்கு செல்லப் பெயர்
'ஃபைலானந்தா!'

இப்போது நான்
காகிதங்களைப் புரட்டும் போது
கண்ணையும் மனத்தையும்
யாரும் பரிதாபப் படாத
ஒருத்தியிடம் பறிகொடுத்துவிட்டு
'சிலையானந்தா' வாக
இருப்பது இவர்களுக்குத் தெரிந்தால்...

ஒரு வேளை நடைபாதைத்
தொழுநோயாளியைப் பார்த்து
முகம் சுளிக்கும்
பாத சாரி போல்
என்னையும் ஒதுக்கி வைப்பார்களோ?

□

10

□

மறுபடியும் மறுபடியும்
பெண்ணே! நீயே
வெற்றி முழக்கம் செய்கிருய்!

நியாயங்கள்
ஒழுக்க வாதங்கள்
அடுத்த மனிதர்களின்
அலட்சிய ஏளனங்கள்
இவைகளை
ஒரே தாவாகத் தாவிப் பாயத்
தூண்டும் காந்தம் நீ!

தெய்வீகம்?
உனது திருவிழிப் பார்வை
அமரத்துவம்?
உனது புன்னகைக் கோவை

நீளமில்லாத உன்
செம்பட்டைக் கூந்தல்
எனது ஜீவிய சொர்க்கத்தின்
நூலேணி

கூர்மையில்லாத
உன் மூக்கு மட்டும் அழகாயில்லை-
ஆனுல் அது நம்
மூச்சு நதிகள் சந்திக்கும் பாலம்!

குவிந்து விரியும்
ரப்பர் உதடுகள்
எத்தனை பொய்களின்

பிரசவக் கூடம்!
எனினும் 'சைவம்' மென்றிடும்
என் கபட உதடுகள்
தின்று ரசிக்கும்
'சாப்ஸ்' துண்டுகள்!

உன் குதிரை நடையழகு
என் விழிகளின் தவம்
அதற்காகக் காத்திருப்பேன்
ஒரு யுகம்-

அந்த அங்க லாவண்யப்
பாற்கடலில் நான் எறும்பு-
இல்லையில்லை-

அந்த அங்க லாவண்யமே
ஒரு தீக்கொழுந்து
அதில்
சிறகுகள் கரிய
சிற்றுடல் எரிய
அதன் மயமாகும்
ஈசல் நான்-
பேசப் பிறகு என்ன இருக்கிறது?

□

11

□

இன்னும் எனக்கு
நிச்சயமில்லை-
இது காதல் தானா?
வெறும்
இளமைத் திமிரா?

மாணவனுக நானிருந்த காலம்
கையெழுத்து மடலொன்று
‘குறிஞ்சி’ என்று
நடத்தி வந்தேன்



எட்டே பக்கங்கள்
ஒவ்வொரு பக்கமும்
கல்லூரிக் காதல் விவகாரம்!

ஆசிரியர்-மாணவி
ஆசிரியை-மாணவன்
ஆசிரியர்-ஆசிரியை
மாணவன்-மாணவி
மன விகாரங்களை
இனம் காட்டும் சிற்றேடு

குறிப்பாகப்
பெரிதகன்ற விழியோடு
கறுப்பு நாவல் கனி வண்ணச்
சங்கீத ராகப் பெயர்க் கன்னி
அவளது செய்தி
வராத இதழில்லை
புத்தகத்தில் மடித்து வகுப்பறையில்
படித்துச் சுவைக்காத
மாணவர்கள் அன்றில்லை-

உளநூல் படித்த என்
நண்பன் சொல்லுவான்;
'உனக்கவள் மேல் மோகமடா!
உன் அடக்கி வைத்த காதல் வெறி
எழுத்தாக கதையாக
எதுக்களித்து வருகிறது...'
அதுதான் உண்மையோ?

என்னைச் சுற்றி இன்று-
உடல் நெளிக்கும் திரைப்படங்கள்
காமக் கடை விரிக்கும் பத்திரிகை
தெருவெல்லாம்
அங்கங்கள் விம்மும்
சுவரொட்டி அழைப்புகள்
ஒலிக்கின்ற பாடல்களில்

பருவ வெறி ஒய்யாரம்
பசிப் பார்வையால் ஆடவர்கள்
அலுவலகப் பெண்களை
அளக்கின்ற கோணங்கள்

இவை என்னை ரகசியமாய்
இரை தேடத் தூண்டிற்ருே?

இன்னும் எனக்கு
நிச்சயமில்லை-
இது காதல் தானு?
வெறும்
இளமைத் திமிரா?

□

12

□

நான் உன்னை நினைப்பது போல்
நீ என்னை நினைப்பாயா?
இதயத்தை நெருடிக்
குத்திக் கிழிக்கும்
வைர ஊசியாயிற்று
உன் நினைப்பு...

மௌனமாக
கனத்த மௌனமாக
கேள்விகள்
ஒடிந்து ஒடிந்து சாய்கின்றன

மூன்ருவது முறை
உன்னைச் சந்திக்கப் போகிறேன்
இன்று கேட்டு விட வேண்டும்

வஞ்ச மகளே!
அந்த நெஞ்சுக்குள் நான்
உண்மையில் இருக்கிறேனா?
உதட்டுக் கோடியில்
உதிரும் உன்
அனந்த கோடிப் புன்முறுவல்களில்
எனக்காகவும் சில
புஷ்பிக்கின்றனவா?

தேனில் தோய்ந்த கரண்டியாய்
நீல மை தீட்டிய
நீண்ட விழிகள்

கடை பரப்பிய வீதியில்
இமைகளால் சிறக்கணிக்க
நானும் ஒரு
வாணிகப் பொருளா?

நிலாக் களஞ்சியமே!
உனது
தினக் காதலரில்
எனக்குமோர்
இடமா?

உனது
பார்வை நெருப்பில்
பட்டுப்பட்டு
தங்கமாய் ஜொலிக்கத்
தாகம் கொண்டேன்
வைரமாய் என்னைக்
கருக்கி விடாதே

எல்லாம்
எலும்பு நரம்பு தோலாய்
எழுதிப் போனவர் உண்டு

மாயை என்று
வாயை மென்றவர் உண்டு
போக விலாசமாய்ப்
புழுங்கிய உன்மத்தர்கள் உண்டு

ஒன்று-
அவர்கள்
இளமை ரதங்களில்
ஏறியதில்லை
அல்லது அவர்கள்
சேலைப் பித்தர்கள்

நமக்கென்ன தொலையட்டும்!
காலக் குமரியே!
மோடி பண்ணாமல்
வாடி
வாடி நான் போகுமுன்
வாடி!

□

13

□

அன்று முதல் வார
வெள்ளிக்கிழமை
ஆசையுடன் உன்னை
அழைத்து வந்தேன்...
எப்போதும் செம்பருத்திப் பூவாய்
என்னோடு சிரித்து வரும் உன்முகம்
பலானாய்ப் பருத்திருந்தது

உன்னுடைய சக தோழிகள்
'அடீ, லதா உன்

புருஷன் வந்தாச்சுடீ'
என்று கேலி பேசிய போதும்
நீ சோகமாகவே இருந்தாய்

வழியில் நீ
மெழுகுப் பதுமையாகவே
வந்தாய்!

உனக்கு மகிழ்வூட்ட
கடற்கரைக்கு
அழைத்துப் போனேன்
கட்டு மரச் சரிவில்
ஒவ்வொரு சங்காகப் பொறுக்கி
வீசிக் கொண்டிருந்தாய்
அலைகள்
கர்ஜனை செய்து கொண்டிருக்க
கடலின் கேள்விகளுக்கு
கரை மௌனம் சாதித்தது
என் 'விசாரிப்பு' களுக்கு
உன் பதிலும் அப்படியே!

அறைக்குப் போனதும்
மேகமில்லாத வானம்
எதிர்பாராமல் பெய்த
மழையைப் போல
நீ
பொருமிப் பொருமி
விம்மி விம்மி
அழத் தொடங்கினாய்!

நான் கேட்க விரும்பிய
கேள்விகள் எல்லாம்
விதைக்குள் முளை
கருகுவது போல்
கருகிப் போயின...

உன்னை நான்
அழ விட்டு விட்டேன்
துயரங்களுக்கு
வடிகால் தானே
அழுகை...
வெள்ளத்தைத் தடுக்கலாம்
உள்ளத்தைத் தடுத்தால்
உடைசல் அழிவுகள்
மிகுந்து போய் விடும்

கண்ணீரை நீ
துடைத்த போது
நட்சத்திரங்கள் துடைக்கப்பட்ட
வானம் போல்
உன் முகம்
இருண்டு போயிருந்தது!...

அப்புறம்
நீ சொன்ன செய்திகள்
எனக்கு நெருப்புப் பொய்கைகள்!

□

14

□

விடியற் காலையின்
கனத்த பனிமூட்டம் கீறி
ஏதோ ஒரு ஆலைச் சங்கு
பிளிறிய போது

உன் கதையைக் கேட்டு
இயற்கை ஓலமிட்டது போல்
எனக்குத் தோன்றியது...

காலைக் குளிர் காற்றும்
சிலிர்த்துக் கொண்டதுபோல்
பிடரி குலுக்கிற்று
முதன் முதலாக
வாழ்க்கையின்
ரத்த நெடி
என்னைத் தாக்கியது

முதல் நாள்
உடல் நலமில்லையென்று
நீ யாரையும் பார்க்க
மறுத்ததால்
மூர்க்கத் தனமாக
உன் 'தொழில்' முதலாளி
தாக்கி மிதித்துத்
தரையில் உருட்டினான்

வேதனை உலையில் நீ
வெந்த போது அவன்
அடியாட்களின் ஒருவன்
குடி வெறி நாறும்
எச்சிலை உமிழ்ந்தான்

ஒரு 'வஸ்தாது'
கூந்தலைச் சுருட்டி இழுத்து
'தாலி கட்டிய பத்தினியோடி?
என்று இறுக்கி அணைக்க
எத்தனித்தான்

நீ பணிந்து போய்
அவர்களின்
பாதத்தில் விழுந்ததால்
நேற்று உயிர் தப்பினாய்,..
எல்லாம்..எல்லாம்..
என் அம்மாவையும்
தங்கை தம்பிகளையும்

காப்பாற்றத் தானென்று
என்னிடம்
கதறி அழுதாய்..

அப்போது தான்
நான் உன்னைக்
கலியாணம் செய்து
காப்பதாய்ச் சொல்ல
மெல்ல முன் வந்தேன்..
நீ அழுகைக்கு நடுவில்
தலையசைத்து மறுத்தாய்-
முடியாது..முடியாது
முடியாது என்று!

□

15

□

'முடியாது..முடியாது..
முடியாது'
என்று பதினைந்து வயதில்
நீ உன் தாயாரிடம்
மறுப்புப் போராட்டம்
தொடங்கியதைச் சொன்னாய்!

'அப்பா இல்லாத
அநாதைக் குடும்பத்தில்
ஆறு வயிறுகள் ஒவ்வொரு நாளும்
பற்றி எரிந்தன
அடுப்பு சாம்பல் பூசி
மௌனம் பூத்துக் கிடந்தது

'ஏழையின் வீட்டுக்கு
இல்லாத ஒரே பஞ்சம்
எனக்கு மூன்று தங்கைகள்
பெண் குழந்தைகள் தானே
ஒரே ஒரு தம்பி!

'அம்மா ஆடி ஓய்ந்து விட்டாள்
சந்தி சிரிக்க
முந்தி விரித்தவள்
பொறுக்கிய சில்லறைக் காசுகள் தான்
எங்களுக்குச் சோற்றுப் பருக்கைகள்

'அம்மா
காசு சம்பாதித்த கதை
காசநோயாச்சு

ரத்த பாசத்துக்காக அலைந்தவள்
இப்போது
ரத்தத் துளிகள் கக்கத் தொடங்கினாள்

'நான்
பருவம் சிங்காரித்த
பதுமையாய் இருந்தேன்
தெருவில் விற்கும் பலகாரக் கூடையை
ஈ மொய்ப்பது போல்
கண்கள் என்னை மொய்த்தன

'அப்பா ரயில் விபத்தில்
இறந்தது போது
என் பள்ளிப் படிப்புக்கு
முற்றுப் புள்ளி விழுந்தது
குடும்பம் பாலத்துச் சுவரில் மோதிய
வாகனம் போல்
வறுமைப் பாதாள
விளிம்பில் நின்றது

'அம்மா நகைகளை விற்ருள்
அப்புறம் காய்கறி விற்ருள்
தலையில் சுமந்து விறகு விற்ருள்
பிறகு?
கற்பை விற்ருள்!
எங்களுக்கு
கால் வயிறு நிரம்பியது...

'எனக்கு இரட்டைச் சடைபோட்டு
ரோஜாப் பூ வைத்துப்
பள்ளிக்கு அனுப்பிக் கொண்டிருந்தவள்
தானே ஒற்றைச் சடை பின்னி
கனகாம்பரம் வைத்து
இரவுப் பள்ளிக்குப்
போகத் தொடங்கிஞள்
என் படிப்பை நிறுத்தி விட்டு
முதியோர் கல்வியாய்ப்
புதிய வகுப்புக்குப் போகலாஞள்
எத்தனையாவது படித்தாளோ
என்னமோ?

'பக்கத்து வீட்டுப் பரிகாசங்கள்
எதிர்த்த வீட்டு ஏளனங்கள்
தெரு மனிதர்களின் முகச்சுளிப்புக்கள்
புது மனிதர்களின் நடமாட்டங்கள்
கசப்பு வழியும் கலசமாயிற்று
என் உள்ளம்—
பழகப் பழகக் கசப்பும்
ஒரு சுவையாகி விட்டது...

'ஒரு நாள் என்ன நடந்தது
தெரியுமா?
நீ கதை சொல்லிக்
கொண்டிருந்தாய்..

நான்
ஜன்னலுக்குள் தெரியும்
வானத்து நட்சத்திரங்கள்
கேள்விக் குறிகளாவதைப்
பார்த்துக் கொண்டிருந்தேன்

□

16

□

நிதானமாகப் பொழுது
புலர்ந்து கொண்டிருந்தது
உன் கதையால்
என் மனதில்
கலவரச் சலனங்கள்.,.

யாரோ கதவைத்
தட்டினார்கள்-
உங்கள் 'தொழிற்சாலைப்' பையன்!

'அக்கா உன்னை
அவசரமா கூட்டி வரச்
சொன்னாங்க...'

திகைப்பு மை பூசிய
உன் கண்களில் திடுக்கம்!
'அப்புறம் பேசிக்கலாங்க'
என்றபடி நீ உன்னை
நொடிப் பொழுதில்
நேர்த்தியாக்கிக் கொண்டாய்

வந்த சுவடு தெரியாமல்
போன காற்றைப் போல்

அடுத்த கணம்
நீ காணுமல் போய்விட்டாய்!
அரைக் கிணற்றின்
அந்தரத்தில் கால் வைத்து
நான்
பாதாளம் நோக்கிப்
பயணம் போகலானேன்

நீ சொன்னதை விட
சொல்லப் போகிறவை
என்னுடைய ஆத்மாவின் நடுவில்
நடுக்கமாய்
சில்லிப்பாய்
மாறிக்கொண்டிருந்தன

விடிகாலேயின்
வெளிச்சம் பெருகப் பெருக
மனம் இருளுக்குள் இருளுக்குள்
புதையத் தொடங்கிற்று

சிந்தனேக் குழப்பத்தைத் தான்
நரகமென்ருர்களோ?

□

17

□

நீ போய் விட்டாய்

இன்னெரு நாள் சந்திப்பு
எப்போதோ தெரியவில்லே
பரிசல்கள் தள்ளாடும்
காவிரித் துறையாயிற்று
என் உள்ளம்

பரம ஹம் சர்களுக்குப்
பெண்ணின் உடல்
ஆன்மாவின் ஆலயம்!

காளிதாசர்களுக்கு
கடவுளின் தரிசனம்!

வக்கிரங்களுக்கு
கழுகலகுத் தசை!

பெண்ணே! எனக்கு நீ
மௌன மயக்க
மதுமலர்த் தொகுப்பு!
தன் மற்ருெரு பகுதியைத்
தேடித் திகைக்கும்
உயிரின் தவிப்பு!

சுகந்த ராகங்கள்
நெகிழ்ந்தவிழும்
அநுராக வீணையே!

ஆராதனையும் தீரா வெறியும்
பிறர் மனக் கலசத்தின்
மது நுரை..
எனக்கு நீ
அமைதி தேடி ஓலமிட்டு
அங்கலாய்க்கும் நீர்த்திரை...

நான் உனக்குக்
கரையாக வேண்டும்
கரையாத கரையாக வேண்டும்

உன்னையன்றி-மெய்யாக-
என்ஞல் வாழ முடியாது
பெண்ணே!

தண்ணீரில் கிடந்தாலும்
தாமரைக்குச்
சாயம் வெளுக்குமா?

கண்ணீர் அவலங்கள்
உன் பெண்மைக்குக்
களங்கம் கொடுக்குமா?

□

## 18

□

அன்று குடியரசு நாள்

கொடிகள் விடுதலை பெறமுடியாமல்
கம்பத்தின் உச்சியில் படபடத்துத்
துடிதுடித்துக் கொண்டிருந்தன
வெறிச்சோடிக் கொண்டிருந்த
கடைத் தெருவில்
வாடிக்கைக்காரர் இல்லாது
'ஷு-பாலிஷ்' சிறுவர்கள்
முடங்கிக் கிடந்தார்கள்

பத்திரிகைப் பக்கங்களில்
இளம் நடிகைகள்
சுதந்தர மகிமையை
விளம்பரப் படுத்தி(து)க்
கொண்டிருந்தனர்

சிங்காரம்பிள்ளை தெரு
சிறைக் கிளியான
உன்னைச் சுற்றி
என் நினைவுகள்
குடை ராட்டினமாயின!

சோக நிலாவாக இருந்தும்
குறும்பு ரேகையிடும்
உன் நகைச் சுவையுணர்வு
என் எண்ணத்தில் மிதந்தது...

ஒரு நாள்
நான் கேட்டேன்..
'உன் உண்மையான
பெயரென்ன?
லதா? சுதா? கலா?
இன்னைக்கு
உள்ளதைச் சொல்லிவிடு..'

நீ மிகவும் கம்பீர தொனியில்
பேசலானுய்
'இதோ பாருங்க
மதுரை சோமண்ணன்
பாட்டுத் தெரியுமில்ல...

மதுரையிலே அவள் பேர்
மீனுட்சி!
காஞ்சியிலே அவள் பேர்
காமாட்சி!
காசியிலே அவள் பேர்
விசாலாட்சி!

அதுக்கும் ஒரு படி
உயர்ந்தவங்க நாங்க..!

ஊருக்கொரு பெயர்-
நாளுக்கொரு பெயர்-
ஆளுக்கொரு பெயர்-

எஸ்தர், லில்லி, எலிசபெத்
மும்தாஜ், ஜரீனு, நூர்ஜகான்
லதா, சுசீலா, அம்பிகா

நொடிக்கொரு மதம் மாறுவோம்
அடிக்கடி மனம் மாறுவோம்..'

நான் சிரித்தபடியே,
'ஏமாற்ருதே

பெயர் சொல்லாமல்
ஏமாற்ருதே..'
என்றேன்

நீ சொன்ஞய்...
'அது.. வந்துங்க..
எங்கம்மா என்னே
மல்லீன்னு கூப்பிடுவாங்க'

அடீ! மல்லி!
மனசில் மணக்கும்
மல்லிகா!
உன் பேச்சு
மறக்க முடியாத கவிதை!
கண் வீச்சு?
மறுக்க முடியாத
புதுக் கவிதை!

□

19

□

'மாதங்களில் நான்
மார்கழியாக இருக்கிறேன்'
என்று சொன்னவன் இன்றிருந்தால்
'நாட்களில் நான்
முதல் தேதியாக இருக்கிறேன்'
என்று மொழிந்திருப்பான்

மனித ஜாதியில் ஒரு பிரிவுக்கு
சம்பள நாள் தானே
மங்கல நாள்!

கனவுகள் மிதக்கும் கண்களோடு
முதல் தேதியன்று

உன்னைக் காண
சிங்காரம்பிள்ளை தெருவுக்கு
வந்தபோது அந்த வீட்டில்
பூட்டிய கதவுகள்!

எனக்கு நினைவுகள்
மரத்துப் போயின..
நான் திசைகளை அறியாது
திரும்பி நடந்தேன்
நடமாடும் செடியாய்...
நகரும் பொம்மையாய்...
ஞாபகங்களைத் தொலைத்த
ஊமையாய்..!

தெரு மூலையில் ஒரு பையன்
என் கைகளில் ஒரு காகிதம்
திணித்தான்..

'போலீஸ் முற்றுகையில்
இடமாற்றம்-
17, ராமர் கோயில் தெரு'

மெல்ல மெல்ல
எனக்குப் புரியலாயிற்று
அதனால் தான்
அன்று உன்னை
அவசரமாய் அழைத்தார்களோ?

காவல் நிலையம்-
துப்பாக்கி வரிசைகள்
நீதி மன்றம்
சட்டப் புத்தகங்கள்
சிறைச்சாலை..
இவைகளின் சுழற்சியில்
என் காதல்
நடுங்கி நடுங்கிச்
செத்துப் பிழைத்தது...

□

20

□

நள்ளிரவு

பவள மல்லிகையின்
பரிமள கனத்தில்
கிறங்கி நிதானமிழந்த போது
நான் ஒன்றும்
நிதான மிழந்து விடவில்லை!

உன் நினைவுகளால்
எனக்குப் பைத்தியம் ஒன்றும்
பிடித்து விடவில்லை

பனிக் காற்றில்
தரையும் என் தலையும்
சிலிர்த்துப் பதறுகையில்
உன் ஞாபகப் போர்வையை
நான் ஒன்றும்
இழுத்துப் போர்த்தவும் இல்லை

சுருண்டு கிடந்த
இருட்டின் மடிப்புக்களைக்
கிழித்துக் கொண்டு
ஒரு ரயிலின் ஊதல் ஒலி
ரௌடி மாதிரி
சீழ்க்கை யடித்த போது
என் மன உளைச்சல்களின்
நெரிசல் தாக்க
என் விழிச் சாளரத்தின்
கண்ணாடிக் கதவுகள்
நொறுங்கி உதிரவும் இல்லை

கை விரலுக்குள்
கசங்கி நெளிந்து
நசுங்கிய சிகரெட்
குமுறிப் புகைந்து
என் விரல்களை ரத்தம் கசியச்
சுட்டு விடவும் இல்லை..

ஆமாம்.. ஆமாம்..
இனி- எனக்கு
இவை யெல்லாம்
ஒவ்வொன்ருய்
நடக்கப் போவது தான்
பாக்கி..!

□

21

□

கவிஞர்களின் கற்பனையில் தான்
கேட்டதைக் கொடுக்கும்
கற்பகங்கள் முளைக்கும்
சராசரி மனிதனின் வாழ்க்கை
யந்திரமாய்த் தொலைக்கும்...

அலுவலகத்தில் அன்று
குழறுபடிகளில்
இடறி விழுந்தேன்...

பக்கத்துத் தட்டெழுத்து யந்திரம்
'மல்லி' 'மல்லி' என்று
படபடத்தது
மேசை மீதிருந்த
கட்டட வரை படங்களின்
ஒவ்வொரு சதுரத்திலும்
நீ! நீ! நீ!

அலுவலக ஊழியர்
கொண்டு வந்த
தேநீர்க் கோப்பையில்
நீ ஆவியாகி
நீ குளிர்ச்சியாகிக்
கொண்டிருந்தாய்...

மேலதிகாரியின் அழைப்பு மணி
உன் சிரிப்பாகக்
கிணு கிணுக்க-
உள்ளே அவர் அறைக்குள்
சென்ற போது

என்ன ஐயா இது
கையெழுத்து
மல்லிகா ன்னு
போட்டிருக்கிறீரே--
ஆபீஸா? காதல் விளையாட்டா?

என்று அவர் அதட்ட
நான் திணறிப்போனேன்...
மென்று விழுங்கி
மன்னிப்புக் கோரி
வெளியேறினேன்...

வியர்க்க வியர்க்க
என் இருக்கை அடையவும்
நெஞ்சு குறுகுறுத்தது
முதுகு குறுகுறுத்தது...

கடைக் கோடி மேசையில்
'தோழ'ரின் கண்கள்
என்னை ஊடுருவித்
துளைத்துச் சென்றன...

விடுமுறைக்கு
விண்ணப்பித்து விட்டு
வெளியேறினேன்...

நேரே..
வெயிலுருக்கிய சாலைகளில்
மனிதர்களும் வாகனங்களும்
குறுக்கும் நெடுக்குமாய்
வாழ்க்கையை நெசவிட்டுக்
கொண்டிருக்க..

நான்
கால்களில் மனதைப் பறி கொடுத்துப்
பாதங்களுக்கு
சுதந்திரம கொடுத்தேன்..

□

22

□

கல கலவென்று நகைத்து
'போலீசுண்ணதும்
பயந்துட்டீங்களா?'
என்றாய் நீ...

பொய்க்குள் புதைந்து கொண்டே
சத்திய ஓடமாய்
சஞ்சரித்தது என் பேச்சு

'எமன் வீட்டு வாசலையும்
உனக்காகத் தட்டுவேன்'
என்றேன் நான்

அவள் விழிகளின்
விசுவ வெளிகளில்
அப்போது
நிதானம் பூத்திருந்தது

'நீங்க நினைக்கருப்புல
போலிசும் கோர்ட்டும்
ஜெயிலும் வேடிக்கையில்லே
அதெல்லாம்
உங்களுக்கு தூரத்து இருட்டு
ஏழைகளுக்கும்
அப்பாளிகளுக்கும்
அடிக்கடி பிடிக்கிற கிரகணம்

அந்த இருட்டிலே
ஓயாமல் துவைத்தெடுத்த
அனுபவம் எனக்கு
அளவுக்கு மீறியே கிடைச்சிருக்கு
இப்ப நான்
எதுக்கும் பயந்தவ இல்லே'
என்ருய் நீ

சட்டென்று
உன் கை விரலில்
ஒரு மோதிரத்தைச் சூட்டி
என்னிடம் உன்னை நான்
இழுத்துத் திருப்பிய போது
எங்கிருந்து இத்தனை பயம்
உன் முகத்தில் முகாம் போட்டது?

எதற்கும் பயப்பட மாட்டேன்
என்ற உனக்குப்
பச்சைக் கல் மோதிரம்
பாம்பானது ஏன்?

என் அன்பை வளைத்துச் செய்த
அழகிய மோதிரம்
நாணப் புன்னகைக்குப் பதிலாக
நடுங்க வைத்ததே உன்னை?

ஏன்? ஏன்?
தேங்கிய மோனக் குளத்தில்
உன் குரல் சிற்றலையாகச்
சிதறலாயிற்று

□

## 23

□

பெரு மூச்சு
நெரிசல்களுக்கிடையே
உன் பேச்சு
கசங்கிக் கசங்கி வெளி வந்தது

‘பூக்களுக்கு
முதுகெலும்பு இல்லை
பெண்களுக்குப்
பாதுகாப்பும் இல்லை

வேலை தேடிப் போன
ஒவ்வொரு மாளிகையும்
விதம் விதமான
காமவெறிக் கானகமாய்...

ஒவ்வொரு கடையும்
வித்யாசமான மனிதரின்
விழி மேய்ச்சல் பூமியாய்...

ஒவ்வொரு அலுவலகமும்
அங்குலம் அங்குலமாய்ப் பெண்ணை
அளவிடும் விஷம ஆய்வுச் சாலையாய்...

என்னை
வேட்டையாடின

கையைத் தொடவும்
மெய்யை வருடவும்
இருண்ட படிக்கட்டுக்களிலும்
ஏகாந்த ‘லிஃப்ட்’ டுகளிலும்
எட்டி முத்தமிடவும்
எத்தனை முயற்சிகள்...

உங்களுக்கு எப்படியோ?
பெண்களுக்கு இது
ஆண் வேஷதாரிகளின்
நித்திய காம
நர்த்தன பூமி

ஒரு நாள்
கூலி வேலைக்குப் போய்
இருட்டுச் சந்தில் திரும்பிய என்னை
ஒரு குடிகாரன்
வழி மறித்தான்

கதறக் கதற
என்னை இழுத்துப் போய்
-எந்தப் பேடியும்
என்னைக் காப்பாற்ற வரவில்லை-
குருவியின் அலகுப் புழுப்போல்
கொத்திக் குதறினான்

கள் வெறிக்கு
கன்னிமையும் கற்பும்
களப் பலியாயின

அதற்குப் பிறகு.....'
நீ ஏனோ பேச்சை நிறுத்தி
என்னை ஏறிட்டுப் பார்த்தாய்!

□

24

□

உன் சுடு பார்வையில்
நான் தலை குனிந்தேன்
நீ தீர்மானமான குரலில்
திரும்பவும் சொன்னாய்:

'அதற்குப் பிறகு...
என் ஆத்மா மட்டும் தான்
அழுக்குப் படவில்லை.

அம்மா சொன்னாள்,
'மல்லி.. நம்ம குடும்பத்துக்கு
வேறு விதி இல்லையடி'

மறுநாள் காலை
நான் வேலைக்குப் போகவில்லை
படுக்கையில் கிடந்து
பகலெல்லாம் அழுதேன்

மாலையில்
பொட்டு வைத்தேன்
பூச்சூடிக் கொண்டேன்
மானத்தைக் கூரை
இறைப்பில் சொருகினேன்
இனி நீ காட்டிய வழியை
எதிர்க்கமாட்டேன்
என் தொழில் இனி உன் தொழிலென்று
அம்மாவிடம் சொன்னேன்

இரவுகளில் கார்களிலும்
ஓட்டல்களிலும் நான்
பணம் அச்சிடும் யந்திரமானேன்

நான் வீடு திரும்புகையில்
கற்பு வானத்து அருந்ததியாய்
கண்ணைச் சிமிட்டிக் கொண்டிருக்கும்

மானம்-
கூரையிலிருந்து
வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும்

அதனால் தான் சொல்கிறேன்
எனக்குக் காதலாவது?
கலியாணமாவது?



## 25



குழல் விளக்குகளின்
பால் வெளிச்சத்தில்
தார் ரோடு
நிர்வாணமாய்க் கிடக்கிறது

வாகனங்களின்
தலைதெறிக்கும் வெறிப் பாய்ச்சல்
இல்லாத சாலை
உயிரற்ற மலைப் பாம்பாய்
உறைந்திருந்தது

தெரு வோரம்
களைத்த கால்களை
அந்தரத்தில் தூக்கிப் போட்டு
ரிக்ஷாக்காரர்கள் கூட
யோக நித்திரையில்...

சாலை மத்தியில்
என்னையே துரத்தி வரும்
என் காலடி ஓசை-
தூக்கம் பிடிக்காமல்
வீதிகளைச் சுற்றிச் சுற்றி
வருகின்ற கால்கள்

மணிக் கூண்டுக் கருகில்
தயங்க
நிமிர்ந்து பார்த்தேன்
மணிக் கூண்டு 'ரிப்பேர்'
என் மனக் கூண்டு போல

விடிகாலைப் பூக்கள்
விழித்துக் கொள்ளும்போது
படுக்கையில் சாய்கிறேன்
முள் முனையில் தவம்!
இதயத்தில் சாரி சாரியாய்க்
கரப்பான் பூச்சிகள்-

அவளுடைய
மறுதலிப்பின் எதிரொலியாய்
விடி வெள்ளி
கை தட்டிச் சிரிக்கிறது

நானும் அவளும்
ஒரு மலைப்பாதையில்
மேலே மேலே
கை கோத்துக் கொண்டு
நடந்து போய்க் கொண்டிருக்கிறோம்

முகில்கள்
சிகரங்களில் கவிழ்ந்து
எங்களை எட்டிப் பார்க்கின்றன

மரக்கிளைகளில்
செம்போத்துப் பறவைகள்
சம்மதக் குறியாய்
குரலெழுப்புகின்றன

திடீரென அவள்
என் கைகளை உதறி
முன்னால் சிரித்துக்கொண்டே
ஓட..நான்

விடாமல் துரத்திப்போக
ஒரு திருப்பத்தில்
அவள் நழுவி நழுவி
மேகக் குவியலைக் கிழித்து
கீழே பாதாளத்தில்.....

'இன்னுமா தூக்கம்?'
பழக்கமான குரலில்
விழித்துக் கொண்டேன்
அது
'தோழரின்' குரல்

நான் மலைச் சிகரத்திலிருந்து
குளியலறைக்கு ஓடினேன்!

□

26

□

அலுவலகத்தின்
தொண்டர் நண்பர்
தோழமைச் செல்வர்
எல்லாம் எங்கள் 'தோழர்'-
தொழிற்சங்கத் தலைவர்

அவரது பார்வை
என்னை ஊடுருவி
என் இதயத்தைத் தடவி
வலம் வந்தது

அலுவலகம் போகும் வரை
அவர் ஏதும் பேசவில்லை
'வேலையைப் பார் தம்பி
மாலையில் பேசலாம்'
என்று விடை பெற்றார்

நான் மேசை மேல்
அடுக்கிய காகிதங்களை
புரட்டிக் கொண்டிருந்த போது
அவள் மறுதலிப்பு வார்த்தைகள்
என்னைப் புரட்டிக் கொண்டிருந்தன

அவள் சொல்லின் சூடுகள்
என்
அடிமனத்தில் தழும்பாகும்
தழும்பிலுமோர் சுகமிருக்கும்
தழுவல்களின் சுவடிருக்கும்

என் தேவ சௌந்தரியாள்
ஏளனத்தின் நெருப்பிருக்கும்
நெருப்பிலுமோர் குறிப்பிருக்கும்
நினைவுகளின் சுவடிருக்கும்

மாலைகளைப் போல் வளையும்
வாலிபத் தேன் கதலிக்கை
மேல் விழுந்து புரண்டிருக்கும்
வெதுவெதுப்புச் சுவடிருக்கும்

பச்சை ரத்னத் தோடுகளைப்
பழித்த எழில் மாணிக்கத்
தத்துக் கிளி யுதட்டில்
தாம்பூலச் சுவடிருக்கும்

காற்றில் என் கண்மணியாள்
கனக நகை தூவி விட்டால்
நூற்றாண்டுக் கப்பாலும்
சிரிப்பொலியின் சுவடிருக்கும்

சுவடுகளின் கீழாகத்
தேடுவதும் ஒரு சுகம் தான்
அவள் அவள் அவள் என்ற
நிழல் தடவும் இனிய சுகம்...

நான்
இயந்திரமாக-
கனவு காணும் இயந்திரமாக
மாறிக் கொண்டிருந்த போது

மறுபடியும்
'தோழரி'ன் குரல்

இரண்டாவது முறையாக
அன்று என்
கனவு கலைந்து கலைந்து
கசங்கிக் குலைந்தது

□

27

□

தூரத்து மணல் துகள்களைக்
கடல் அலைகளைப் போல் மினுக்கிய
அந்தி வெயிலின் மாயம்
மெல்ல மெல்ல மங்கிக் கொண்டிருந்தது

'அவளிடம்
நான் கொண்ட காதல்
சூரியனைப் போல் சுத்தமானது'
என்றேன் நான்

'ஆனால் தம்பி
அவள் இரக்கத்துக்குரியவள்
குடும்பத்துக் குரியவளா?'
என்றார் தோழர்

'எனக்கு
அது தெரியாது
ஆனால் என் ஜீவனையே
சிலிர்க்க வைக்கிற ஆச்சரியம்
அவள் தான்

இந்த உயிர்ப் பொம்மைக்கு
அவள் பார்வை தான்
சூட்சுமக் கயிறு

அவளைக் காப்பாற்றுவது
என்ற லட்சியமெல்லாம்
எனக்கில்லை

என்னையே நான்
காப்பாற்றிக் கொள்ள
அவள் வேண்டும்'-
என் பேச்சு மனனம் செய்து
பாடம் போல் ஒலித்தது

'உன் காதல் இருக்கட்டும்-
அவள் தொழிலால் பரத்தை
நாளைக்கும் அந்த மாடு
தும்பறுத்துக் கொள்ளாது என்று
யார் சொல்ல முடியும்?'
என்றார் அவர்

'எனக்கு அவளிடம்
நம்பிக்கை இருக்கிறது
நாளைக்கும் கிழக்கில்
சூரியன் வரும் என்று
எவ்வளவு நம்புகிறேனோ
அவ்வளவுக்கு....'

என் குரலில் உருக்கு
இழைந்தது

'உன் அம்மாவையும்
உறவினர்களையும்
கொஞ்சமாவது
நினைத்துப் பார்த்தாயா?'
வேறு திசையிலிருந்து 'தோழ'ரின்
தாக்குதல் தொடர்ந்தது

'அம்மாவுக்கு இவள் பூர்வீகம்
தெரியாது தோழரே-
உறவினரைப் பற்றி

எனக்கு அக்கறை இல்லே
அவர்கள் குரைப்பெல்லாம்
என் தீர்மானமான முடிவில்
சிதறிப் போகும்' என்றேன் நான்

கடைசியாகத் 'தோழர்'
தீர்க்கமாய் என்னேப் பார்த்து
ஒன்று கேட்டார்
'என்னே நம்புகிருயா?'

நான் அவர் கரங்களேப்
பற்றிக் கொள்ளுகையில்
என் விரல்கள் நடுங்கின
நாக்கு இடறிக் குழறியது
'இது என்ன கேள்வி' என்று

என் தோளேத் தட்டி
அவர் சொன்ஞர்
'நான் அவளேயும்
சந்தித்த பிறகு தான்
சிந்தித்து முடிவுக்கு வருவேன்

இந்த வாரம் ஞாயிறு பகலில்
இழுத்து வா அவளே
அவரது குரலில் கண்டிப்பு
எனக்கு அதற்குள் ஒரு தித்திப்பு!

□

28

□

அன்றிரவு நட்சத்திரங்களோடு
என் கண்களும் விழித்திருந்தன
மனசு மல்லிகா மயமாகி
மணந்து கொண்டிருந்தது

நான் அந்தரங்கமாக
எனக்குள் சொல்லிக் கொண்டேன்:

திரும்பத் திரும்ப நான்
பார்க்க விரும்பும்
தீரா வனப்புடைக்
காட்சிகள்
இந்த வையத்தில்
இரண்டே இரண்டு

ஒன்று-
இமயத்தின் மடியில்
அரித் துவாரத்தில்
மெல்லக் கவிழ்ந்த
அந்திப் பொழுதில்
சின்னத் தொன்னையில்
பூவிதழ்ப் படுக்கையில்

ஏற்றிய ஆயிரம்
திருவிளக்குகள் ஜொலிக்க
நட்சத்ர ஊர்வலம்
நடத்தும் புனித கங்கை;

மற்றொன்று-
என் ஆருயிரின் ஊர்வலமே!
நீ!

திரும்பத் திரும்ப நான்
கேட்கத் தவிக்கும்
செழு மணிக் கீதங்கள்
இந்த உலகத்தில்
இரண்டே இரண்டு

ஒன்று-
மதுரை சண்முக வடிவு மகள்
பொன்னிழைக் குரலில்

நெசவு செய்தெடுத்த
''காற்றினிலே வரும் கீதம்''

மற்றென்று
என் பேசாத புல்லாங்குழலே!
உன் சிணுங்கல்

திரும்பத் திரும்ப நான்
பார்க்கவும் கேட்கவும்
அறவே விரும்பாத
அவையும் இரண்டு

ஒன்று-
என வள நாட்டின்
தீரா வறுமை

இன்னொன்று
உன் தரிசனம் பெருத
வாழ்வின் வெறுமை''

□

29

□

காப்பிக் கோப்பையில்
கரண்டியைச் சுழற்றியபடியே
தோழர் அவளிடம்
உரையாடிக் கொண்டிருந்தார்

தலை குனிந்தபடியே
தந்தையிடம் மகளைப்போல
அவள் பேசிக் கொண்டிருந்தாள்

தூரத்திலிருந்து நான்
என் தேசத்தின் எதிர்காலத்தைக்
கவலையுடன் பார்க்கும்
தேசபக்தனைப் போல்
கவனித்துக் கொண்டிருந்தேன்

தரையில் அவள்
கால் பெருவிரல்
சலிப்பில்லாமல் கீறிய போது
என் உள்ளம் முழுதும்
தாறுமாறாகக்
காயங்கள் பட்டன

அவள்
என்ன சொல்லுவாளோ?
வாழ்க்கை கற்றுக் கொடுத்த
அழுத்தத்தில்
வைரம் பாய்ந்தவளாயிற்றே!
அந்த வைரம்
என்னை அலங்கரிக்குமா?
என்னைச் செல்வந்தனுக்குமா?
என் இதயப் பேழையில்
இருக்கச் சம்மதிக்குமா?

அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில்
நான் நிமிர்ந்து
மரங்களைப் பார்த்தேன்
அவை
பசுமையில் குளித்திருந்தன
பூக்களோடு சிரித்தன

அந்தத் திறந்த வெளி
உணவுச் சாலையில்
சிரிப்பும் களிப்புமாய்
கவலையில்லாத மனிதர்கள்
பட்டுப் பூச்சிப் பெண்கள்-
சிட்டுக் குருவிக் குழந்தைகள்!

நான் அடைகாக்கும் கோழி போல்
குறுகுறுவென்று அமர்ந்திருந்தேன்

கலகலவென்று
சிரிப்பொலி முழங்கியது
நம்பிக்கையோடு நான்
அவர்களைப் பார்த்தேன்

ஒருவர் முகத்தை ஒருவர்
உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர்
பக்கத்து மேசையில் எவரோ
சிரித்துக் கொண்டிருந்தார்கள்

நான் பொறுமைக்கு
எதிரியானேன்
எழுந்து சவுக்கு மரங்களிடையே
நடக்கத் தொடங்கினேன்
கவலையில்லாமல்
சீழ்க்கை யடித்துக் கொண்டிருந்தன
நெட்டை மரங்கள்

சிறுவர்கள் அருகில்
மொட்டை மாடியிலிருந்து
பட்டம் விட்டுக் கொண்டிருந்தார்கள்
நீல வானத்தில்
வெள்ளைப் பாம்புகள்
நீந்தும் போது
என் மனம்
கரணமடித்துக்
கவிழலாயிற்று

ஒரு யுகத்
தவிப்புத் தவத்தின் பிறகு
மனோ ரதங்களின்
அச்சு ஒடியும் வரை
கற்பனைச் சக்கரங்கள்
ஓடித் தேயும் வேளையில்

'தோழர்' கையசைத்துக்
கூப்பிட்டார்

நான் வானத்தையும்
கருமேகங்களையும்
தலையில் சுமந்துகொண்டு
அவரை நெருங்கினேன்...

அவள் முகம்
சாயங்கால வெளிச்சத்தில்
கடலோரத்துச்
சிலை வடிவம் போல்
இறுகி இருந்தது

□

30

□

தீப்பந்தங்களைத் தூக்கியபடி
உச்சக் குரலில்
'வேலை கொடு எங்களை
வாழவிடு' என்று
நகரைக் குலுக்கி
நகர்ந்த ஊர்வலத்தை
முதன்முதலில்
நான் பார்த்த போது
'தோழர்' அதன்
முன்னணியில் இருந்தது
எனக்கு நினைவுக்கு வந்தது...

அலுவலகத்தின்
ஊழியர் போராட்டங்களில்
அவரது உத்வேகப் பங்கெடுப்பை
நான் அளந்தெடுத்துப்
பார்த்ததுண்டு...

மேடைகளில் 'ரசவாதம்'
தனிவாழ்வில் 'சுகவாசம்'
பார்க்காத
உத்தமர் அவர்

ஆனல் என்
அந்தரங்க வாழ்க்கைக்கு
ஆறுதலைத் தரவும்
அரவணைப்பாய் வரவும்
அக்கறைப் படவும்
பக்குவமிருந்தது
அவருக்கு...

அந்தி மயங்கிக் கொண்டிருந்த போது
அந்த மனிதர்
என் கைகளைக் குலுக்கி
தன் நரைத்த தலைமுடி அசைத்து
'ஓ...நீ பாக்கியசாலி'
என்று
கம்பீரமாகப் பாராட்டினர்

இப்போது தான்
முதன் முறையாக
சந்தித்துக் கொண்டவர்களைப் போல்
அவள் கண்களுள்
நான் கலந்து கரைந்தேன்

பக்கத்தில் நின்ற
பெரியவரை மறந்து போன
வெட்கத்தில்
எங்கள் விழிகள்
நிலம் பதித்தன ...

□

31

□

அன்றிரவு என்
அறைக் கதவுகள்
சாத்தப்படுவதற்காகக்
காத்துக் கிடந்தன

காமத்தைக்
கடைச் சரக்காக விற்கும்
விரச வியாபாரிகளிடமிருந்து
அவளை-என் மல்லிகையை-
விடுவித்து வரப் போயிருந்தார்
தோழர்...

நள்ளிரவு பன்னிரண்டுக்கு
கடிகார முட்கள்
இடைவெளியின்றி இணைந்தன
அப்போது அவள்
அறைக்குள் நுழைந்தாள்
முகமெல்லாம்
ரோஜாப் பூ குங்குமப் பூ

அவர்-
தொழிலாளர் பிரச்னைகளெனில்
புத்துணர்ச்சி குமிழியிடும் அவர்
களைத்துப் போயிருந்தார்
ஆனாலும் பேசத் தொடங்கினர்...

''கடும் மிரட்டல்களால்
இவள் மீட்கப்பட்டிருக்கிருள்

அவர்கள்
நச்சுப் பாம்புகள்
சிறிஞர்கள்-
சட்டம் என்ற மந்திரத்தால்
கட்டிப் போட்டிருக்கிறேன்
எப்போது வேண்டுமானலும்
சீறுவார்கள்
நிச்சயம் விஷம் தீண்டக் கூடும்
எச்சரிக்கை வேண்டும்...

அம்மாக்களுக்கு
அப்புறம் சொல்லலாம்
பதிவுத் திருமணம்
இதுதான் அவசரம்

நாளை பார்க்கலாம்
வரட்டுமா?"

அவள் தான் அறிவாளி
'தோழர்' காலில்
மாலையாய் விழுந்தாள்
அப்புறம் தான் நான்
வணங்கக் குனிந்தேன்

நாங்கள் எழுகையில்
'இதெல்லாம் எதற்கு' என்று
கதவைச் சாத்தி
விடை பெற்ருர் அவர்...

கதவுக்குத் தாழிடவில்லை
விளக்கு எரிந்து கொண்டிருந்தது
நாங்கள்
தூங்கவுமில்லை!

□

32

□

நட்சத்திர வினாக்குறிகளுக்கு
குறட்டைகளால்
மனிதர்கள் பதிலிருக்கும்
இந்த இரவில்
காதல் கண்களோ எனில்
விடி விளக்கேற்றுகின்றன

கேள்விகளை
வேண்டுமென்றே தொலைத்து விட்டுக்
கிடைத்த பதில்களால்
பசியாறுகின்றன

நிரந்தரமான கேள்விகளும்
சுதந்தரமான பதில்களும்
சந்திப்புக்களை எதிர்பார்க்காமலே
சுகமாய் ஒளிகின்றன

மௌனம் என் கேள்வி
மகத்தான மௌனமே உன் பதில்

அர்த்தங்கள் புனைய வொண்ணாத
அமைதியின் வியூகத்தில்
சமரசங்கள்
சமர்க்களமாகின்றன

நிழல்களை
நடனமிடவைத்த தீபங்கள்
அசரீரியாய்
இதயத்துள் ஆடத் தொடங்குகின்றன

மனித சுவாசங்களில்
இத்தனை சுகந்தமா?
வியர்வையில் இத்தனை நறுமணமா?
ஓ!
சொர்க்கம்
பூமியில்தான்! பூமியில்தான்!

□

## 33

□

நூறு சிறகும்
ஆயிரம் காலும்
கோடிக் காதும்
கண்கள் மட்டும் குருடுமான
ஒரு பிராணியைத் தெரியுமா
உங்களுக்கு?

வதந்தி! வதந்தி!

பதிவுத் திருமணமாகி
புது வீடு சென்றவுடன்
பக்கத்து வீடெல்லாம்
கேள்விகள் முளைத்த கண்கள்
அலுவலகத்தில்
அசை போடும் வாய்கள்

தெருவில் அவளோடு
செல்லுகையில்
மெல்ல 'விசில்' ஒலிகள்

இதையெல்லாம்
பொருட்படுத்தும்
இதயமில்லை எனக்கு-

சக மனிதர்களின்
இதயக் குரூரமே அவளை
ஈட்டியாய்த் துளைத்தது

ஒவ்வொரு கேலியும்
என்னை உறுதிப்படுத்தியது
அவளுக்காக உலகை எதிர்க்கவும்
ஆற்றல் வழங்கியது

நான் அவளிடம்
சொன்னேன்;
''சந்தோஷங்களால்
என் கிண்ணங்கள் நிரம்புகையில்
அன்பிற்கினியவளே!
உன்னிடம்
இதைச் சொல்லுவதற்காக
வருந்தாதே!

மண் பிறந்த மேனியாய்
இருப்பதற்காக
வெட்கப்படுவதில்லை

போகெய்ன் வில்லாப் பூக்கள்
மணமில்லையே என்று
புன்னகையை மறப்பதில்லை

நீயும்
வறுமையோடு வந்தோமே
என்று வருந்தாதே
ஏழை என்பதற்கு நீ
இனிமேல் பெருமைப்படு

ஏனெனில்
உலகத்தின்
எல்லாச் சுகங்களும்
இனி ஏழைகளுக்கே
சமர்ப்பணமாகப் போகின்றன

என்னை நம்பு
உலகத்தை மறந்து விடு
இனி நான் தான்
உன் உலகம்

பாடு! சிரி! பறவையாய்த் திரி!
துயரத்தை எரி!
தலையை நிமிர்த்து!
கேலிகளை அலட்சியப்படுத்து!''

சோக இருட்டுக்
கவிந்த அவள் முகம்
சுடர் விடத் தொடங்கியது
மெல்ல உதட்டில் ஒரு
பூச்சரம் அரும்பியது!

□

34

□

உனக்கு விநோதமான
ஆசைகளடி!
உனக்குப் பிடித்தவை
இந்திப் படங்கள்
எனக்கு ஆங்கிலப் படங்கள்

நீ இந்திப் படத்தில்
ஈடுபடும் போது
நான் உன்னை ரசிக்கிறேன்
ஆங்கிலப் படத்தில் நான்
ஆழ்ந்து விடுகையில்
நீ என்னை ரசிக்கிறாய்

கடைசியில்
நாம் இரண்டு பேருமே
ரசித்துப் பார்ப்பது
விளம்பரப் படங்கள்-
தலைவலி மாத்திரை
விளம்பரப் படங்கள்

சரிதான்-
ஊரார் கொள்ளிக்கண் பார்வையில்
சீரழிந்த போதெல்லாம்
நமது நெருங்கிய நண்பன்
தலைவலி மாத்திரை தானே!

□



□

35

□

நீ என்ன
விளையாட்டுப் பொம்மையா?
விதம் விதமாக உன்னை
அலங்கரித்துப் பார்க்க
ஆசை எனக்குள்
அரும்புவதென்னவோ?

நீ என்ன
உலா வரும் தெய்வமா?
கொடுக்கிறாயோ இல்லையோ
அடுக்கடுக்காக உன்னிடம்
வரம் கேட்காமல்
இருக்க முடியவில்லையே!

நீ என்ன
என் குழந்தையா?
உச்சி மோந்து மடியில் கிடத்தி
கச்சிதச் சிரிப்பில்
கதை நூறு கேட்க
இதயக் கலசம்
துளும்பித் தவிக்குதே

நீயும் நானும்
குடைராட்டினத்திலா
குடும்பம் நடத்துகிறோம்?
முன்னால் சடை துள்ள
குதிரைமேல் பறக்கும் உன்னை
விடாமல் துரத்தித் துரத்தித்
தொடர்கிறதே என்
இதயப் புரவி

இல்லை இல்லை
நீ ஒரு புதிர்-
உன்னை என்னால்
விடுவிக்கவே முடியவில்லை
நிரந்தரமாக என
நெஞ்சிலிருந்தும்
அகப்படும் போது என்
கைகளிலிருந்தும்!...

□

36

□

சமூகம் ஒரு
வேட்டை நாய்
இல்லை-வெறி நாய்!
அலுவலகத்திலும்
நண்பர் கூட்டத்திலும்
என்னை ஒரு
தினுசாகப் பார்த்தார்கள்
மனசுக்குள் சிரித்தார்கள்

எவளோ ஒருத்தி
வீட்டுக்கரசி ஆகிவிட்டாள்
என
உலகம் நினைக்கிறதோ?

மறைவான கிண்டல்கள்
சாடை மாடையான கேலிகள்
'தெருவில் அவள் கைது
இவள் கைது' என வரும்
பத்திரிகைப் பக்கங்களில்
அலுவலகப் பிரதியில்
சிவப்பு அடிக் கோடுகள்

இழுத்துப் போர்த்திக் கொண்டு
என் அலுவலகப் பெண்கள்
கழுத்து வரை
கற்பைக் காக்கும் பாவனை
அலங்கோலங்கள்

இத்தனையும் விழுங்கிக் கொண்டு
இல்லம் சேர்கிறேன்
பூந்தோட்டம் நடந்து வந்து
குலுங்கிக் கதவு திறக்கையில்
மறுபடியும் நான்
மனிதனாகிறேன்
'புறப்படு...புறப்படு...
இன்றைக்குக் கடற்கரைக்குப்
போகலாம்' என
அவளை சந்தோஷப்படுத்த
ஆயத்தமாகிறேன்...

□

37

□

கடற்கரை..
மனித வெள்ளத்தில்
முழுகித் திணறும்
மாலைப் பொழுது-

நிறம் நிறமான
கிளிஞ்சல்கல்..சங்குகள்
விதவிதமான
பணியாரங்கள்...பலகாரங்கள்

சில்லென்ற ஐஸ்கிரீம்
கொதிக்கும் தேநீர்

வண்ண வண்ண நிறத்தில்
சின்னச் சின்ன பொம்மைகள்
வரிசை வரிசையாகக்
கடை விரித்த கடற்கரை...

ஆயிரம் நிழல்களின்
மாய உலகத்தில்
மணல் சாம்ராஜ்யத்தில்
நீ தத்தித் தத்தி விழவும்
நான் பற்றிப் பற்றித் தாங்கவும்
குதூகலச் சிரிப்பொலி
முழக்கினுய் நீ!
நீலக்கடல் கூட அதைக் கேட்க
ஒரு கணம் ஓய்ந்து நின்றது...

கரடு முருடான கட்டுமரத்தில்
நீ அமர்ந்த மாத்திரத்தில்
அது உயிர்பெற்றுத் தளிர்த்தது

பொம்மைக் கடையில்
துறதுறுத்த உன் கண்கள்
ஒரு பொம்மையை-
தொட்டிலில் ஆடும்
குழந்தைப் பொம்மையை
வாங்கித் தரும்படி
ஆசையோடு மலர்ந்ததே

உன் செல்லமுகம்
சிவந்து பூரிக்க
அந்தப் பொம்மையை
வாங்கி அளித்தேன்

ஆனுல் பெண்ணே!
இப்போது உன் தாலாட்டுக்கள்
எனக்காக மட்டுமே
ரீங்கரிக்கட்டும்

அதனுல் தான்
பிளாஸ்டிக் குழந்தையைக்
கொடுத்திருக்கிறேன்
பேசும் ஓவியம்
இன்னும் சிலநாள்
பின்னுல் வரட்டுமே!

□

38

□

ஒரு நாள்-
அணிவித்த மோதிரத்தை
எங்கே என்றேன்
அது தொலைந்து
போய் விட்டதாகச் சொன்னுய்!

மற்ளெரு நாள்
வடிவழகுடைய கையில்
வளையல்கள் காணவில்லை
ஏறிட்டு முகத்தைப் பார்க்க
எங்கேயோ பார்வை செல்ல

''அடகுக்கா வைத்து விட்டேன்
அழித்து நான் இன்னும் வேறு
மாதிரி புதிது செய்யக்
கொடுத்துள்ளேன்''
என்று சொன்னுய்!

இன்னும் நான்
பேச எண்ணித் திரும்பினேன்
இரு விழி ததும்பக் கண்டு
பேச்சுக்கு
அணையைப் போட்டேன்

மற்ெருரு நாள்
மல்லிகை வாங்கிக் கொண்டு
வீட்டுக்கு வந்த போது
உள்ளே பேச்சரவம்...

தட்டிய கதவு
தாமதமாகத் திறந்தது
உன்னையும் தாண்டி
என் பார்வை பாய்கையில்
கொல்லைப் புறத்தில் யாரோ
திரும்பிச் செல்வது
போலத் தெரிந்தது

'யாரது?' என்று
மெல்லத் தான் கேட்டேன்
'ஒருத்தருமில்லையே
ஒருத்தருமில்லையே
பூனையா! இருக்கும்!'
என்று நீ
தத்தளித்துத் தடுமாறிஞய்!

என்கையிலிருந்த
மல்லிகைப் பூப் பொட்டலம்
இமயமலை போல்
கனக்கத் தொடங்கியது

நான் முகம் கழுவக்
குளியலறைக்குள் சென்ற போது
தண்ணீர் வெந்நீராகச் சுட்டது
என் கண்ணீரால்...!

□

39

□

நுரை துளும்பும் காப்பியை
எப்போதும் போல் நீட்டினுய்
உன் களங்கமில்லாத முகத்தை
நான் அடையாளம்
காண முடிந்தது

ஆனுல் அதன் ஒவ்வோர் அணுவிலும்
துயர முட்கள்
முளைத்தது போல
எனக்குள் பிரமை!

உன்னை நான்
ஆதுரத் தோடு
அணைத்துக் கொண்டேன்
அன்றிரவு என் கனவில்
ஒரு தாஜ்மகால்
திரும்பத் திரும்பத் தெரியலாயிற்று

அந்தரங்கமாய்
மானசீகமாய் என்மனம்
உனக்கொரு தாஜ்மகால்
புனைந்து கொண்டது
நீ உயிருடனிருக்கும் போதே
உனக்கு ஒரு தாஜ்மகால்!

வெள்ளைப் பளிங்கால்
நான் அதைக் கட்டவில்லை
ஓ! அது
சிவப்புத் தாஜ்மகால்!

மற்ெருரு நாள்
மல்லிகை வாங்கிக் கொண்டு
வீட்டுக்கு வந்த போது
உள்ளே பேச்சரவம்...

தட்டிய கதவு
தாமதமாகத் திறந்தது
உன்னையும் தாண்டி
என் பார்வை பாய்கையில்
கொல்லைப் புறத்தில் யாரோ
திரும்பிச் செல்வது
போலத் தெரிந்தது

'யாரது?' என்று
மெல்லத் தான் கேட்டேன்
'ஒருத்தருமில்லையே
ஒருத்தருமில்லையே
பூனையா! இருக்கும்!'
என்று நீ
தத்தளித்துத் தடுமாறிணுய்!

என்கையிலிருந்த
மல்லிகைப் பூப் பொட்டலம்
இமயமலை போல்
கனக்கத் தொடங்கியது

நான் முகம் கழுவக்
குளியலறைக்குள் சென்ற போது
தண்ணீர் வெந்நீராகச் சுட்டது
என் கண்ணீரால்...!

☐

39

☐

நுரை துளும்பும் காப்பியை
எப்போதும் போல் நீட்டினுய்
உன் களங்கமில்லாத முகத்தை
நான் அடையாளம்
காண முடிந்தது

ஆனல் அதன் ஒவ்வோர் அணுவிலும்
துயர முட்கள்
முளேத்தது போல
எனக்குள் பிரமை!

உன்னே நான்
ஆதுரத் தோடு
அணேத்துக் கொண்டேன்
அன்றிரவு என் கனவில்
ஒரு தாஜ்மகால்
திரும்பத் திரும்பத் தெரியலாயிற்று

அந்தரங்கமாய்
மானசீகமாய் என்மனம்
உனக்கொரு தாஜ்மகால்
புனேந்து கொண்டது
நீ உயிருடனிருக்கும் போதே
உனக்கு ஒரு தாஜ்மகால்!

வெள்ளேப் பளிங்கால்
நான் அதைக் கட்டவில்லே
ஓ! அது
சிவப்புத் தாஜ்மகால்!

நமது ரத்தக் கலப்பின்
ஜீவ சாட்சியாய்-
உதிர அணுக்களின்
உயிர்ச் சங்கமமாய்-
தகித்துச் சுடரும்
அகத்து நெருப்பாய்
அது ஒரு
சிவப்புத் தாஜ்மகால்!

அதன் ஸ்தூபிகள் மட்டும்
வெள்ளையாய்
சூரிய ஊசியில்
சந்திரத் தாரையில் மினுங்கும்

கவின் சிந்தும் அந்த ஸ்தூபிகள்
கண்ணாடிகளால் இழைக்கப்படவில்லை
அவை
கண்ணீர்த் துளிகளால்
கண்ணீர்த் துளிகளால்
கட்டப்பட்டிருந்தன!

இதைக் கேட்டு
நகைப்பவர் நகைக்கட்டும்
அவர்களுக்கு தெரியாது
எல்லாத் தாஜ்மகால்களுமே
ரத்தத்தாலும்
கண்ணீராலும் தான்
கட்டப்படுகின்றன என்று!

□

40

□

இரண்டு மாதங்கள்
இருக்கலாம்
குடும்ப வாழ்க்கை தொடங்கி...

அன்று ஏனோ
குதூகலம் எனக்குள்
குமிழியிட்டோட
வீட்டுக்கு வந்தேன்

என்னை வரவேற்றது உன்
வசீகரப் புன்னகையின்
இசைப் பாட்டு அல்ல
ஒரு கனத்த பூட்டு!

திகைப்புடன்
திரும்பிய என்னிடம்
பக்கத்து வீட்டுச் சிறுமி
''அக்கா குடுத்துட்டுப்
போனுங்க...'' என்று
வீட்டுச் சாவியைக்
கொடுத்து விரைந்தாள்

இயந்திரமாக நான்
பூட்டைத் திறந்து
காலடி வைத்ததும்
கடிதம் ஒன்று
காலில் தட்டியது

பாம்பை மிதித்தது போலப்
பதற்றமடைந்தேன்
காகிதச் சுருளில் ஒரு
கத்தி இருந்தது-
என் இதயத்தைக் கிழிக்கும்
எழுத்துக் கத்தி..

''அன்பிற்குகந்தவரே!
ஆயிரம் கோடி வணக்கங்கள்
நான் போகிறேன்
எனக்குக் கால்விட்ட வழியில்...

என்னைத்
தேடாதீர்கள்
தெருவில் திரிந்தேன்
மாளிகையில் வைத்தீர்கள்
மறுபடியும் இந்தப்
பறவை பறக்கிறது
வீண் முயற்சி! தேடாதீர்!
அன்பு மல்லிகா''

□

## 41

□

கொட்டும் மழையில்
இடி விழுந்த பனைமரம்
தீப்பிடித்துக் கொண்டது போல்
என் உடலெல்லாம்
எரிந்து தகித்தது

மனம்
காளவாயாகக்
கனன்று கொதித்தது

கண்கள் வெந்நீர்
ஊற்றுக்களாயின

தட்டாமாலையாய்ச்
சுழன்றது தலை
நினைவு தடுமாறி
நிலை குலைந்து விழுந்தேன்

மெல்ல விழிப்பு
நேர்ந்த நேரத்தில்
எல்லாப் பக்கமும்
இருட்டு மலைப்பாம்பு
என்னை வளைத்திருந்தது

தடவித் தடவி
மின் விளக்கைப் போட்டதும்
அவள்
சாந்தமாகச்
சிரித்துக் கொண்டிருந்தாள்
மேசை மீதிருந்த
புகைப் படத்தில்...!

படத்தை எடுத்து
உற்றுப் பார்த்துப்
பார்த்த வண்ணமாய்
''மல்லீ...மல்லீ...
மல்லீ..''
என்று வாய்விட்டுக்
கதறினேன்

மேசை மேல்
நான் அருந்தக்
காபி பிளாஸ்கில்
காத்துக்கொண்டிருந்தது

துவைத்து உலர்த்தி
தூய்மையாய்த் தேய்த்த
உடைகள் வரிசையாய்
அடுக்கிக் கிடந்தன

என்
துக்கம் ஆத்திரமாய்
ஆத்திரம் வெறியாய்
விசிறியடித்ததில்
காபி சிதறி
துணிகளில் கறைகள்
துளியாய்ப் படிந்தன...

அப்போது எனக்குள்
தோழரின் நினைவு
தோன்றலாயிற்று

ஆசான் நண்பர்
அருமைத் தந்தை
அவரே யாதலால்
தெருவில் இறங்கி அவரைத்
தேடி ஓடினேன்

வீதி விளக்குகள்
''ஏன்? ஏன்? ஏன்?''
என்று என்னிடம் கேட்டன
நிழல்களாய் உலவிய
மனிதர்கள் ஏதோ
புறவெளிப் பிராணிகள்
போலத் தெரிந்தனர்

வாசலில்
சாய்வு நாற்காலி மீது
ஓய்வாய் இருந்த
தோழரைக் கண்டதும்
தேம்பல்
அணையுடைத்துக் கொண்டது!
கண்கள்
குடமுடைத்துக் கொண்டன!

□

42

□

''தம்பி எப்படியும் நாம்
கண்டு பிடித்து விடலாம்
அது வரை
இதுதான் உன் வீடு
அதுவரை
அலுவலகத்துக்கு விடுப்புப் போடு

முதலில்
ஏதாவது சாப்பிடு...''

இந்தத் தாய் மனம்
என்னைத் தழுவிக் கொண்டதும்
நிம்மதி எனக்குள்
நிலவலாயிற்று

உடையணிந்து கொண்டு
அவர் புறப்படும் போது
ஏக்கம் எழுதிய என் கண்கள்
நம்பிக்கையோடு அவரை
வழியனுப்பி வைத்தன

அவர் போனதும்
கண்களை மூடி நான்
சாய்வு நாற்காலியில்
ஓய்ந்து விழுந்தேன்
அலை அலையான
நிகழ்வுகள்
கறுப்பாய் வெளுப்பாய்
வண்ணக் கலவையாய்
மனத்திரை மீது
மறுபடி அசைந்தன

...யாருமே இல்லாத
ஓர் அடர்ந்த கானகம்
புல் வேய்ந்த குடிசை
பூங்கொடி வரிசை
சில்லென்ற ஓடை
குழந்தைபோல் தவழும்

முற்றத்தில் அவள்
மான் குட்டியோடு
முகம் வைத்துக் கொஞ்ச
பச்சைக் கிளிவந்து
பக்கத்தில் கெஞ்ச

கனியும் கிழங்கும்
காட்டுப் பூக்களும்
பறித்து வந்த நான்
இந்த
அமைதி ஓவியத்தில்
இழைந்து கரைகிறேன்...

ஒலி ஒன்று கேட்டு
கலங்கி விழித்தேன்
பருக ஏதோ
பானத்தை வைத்து
நடந்து நகர்ந்தாள்
தோழரின் மகள்!

□

43

□

தோழரின் முயற்சி
தொடர்ந்து கொண்டிருந்தது
அடித்துத் துவைத்துப்
பிழிந்த கந்தலாய்
நாளும் நாளும்
நைந்து கொண்டிருந்தேன்

கட்டிலில் நான் மர
வட்டையாய்ச் சுருண்டேன்
சாய்வு நாற்காலிச்
சரித்திர மானேன்

தொட்டில் குழந்தை போல்
இந்த மன நோயாளிக்குத்
தோழரின் மகளே
மருத்துவத் தாதி

அவரோ என்னைப் போகவிடாமல்
அங்கும் இங்குமாய்
அலைந்து கொண்டிருந்தார்
இவளோ என்னைச் சாகவிடாமல்
இமைபோல் காத்து
நடந்து கொண்டிருந்தாள்

நானோ
வெடித்த மனத்தின் தரிசில்
ஞாபகக் கலப்பையால்
நினைவுப் புழுதியை
அளைந்து கொண்டிருந்தேன்

□

44

□

வீட்டில்
நெடுநாளாய் வளர்ந்தோங்கிப்
பயனற்று நின்ற மரம்
பூத்தது இன்று!
அவள் நினைவுகள்
எனக்குள்
'குப்'பென்று பூத்ததன்
உருவகமோ அது?

அந்த வானொலியில்
நடு இரவின் இதயம் கீறி
'வயலின்' நரம்புகளில்
அதிர்ந்ததொரு கீத ஒலி!
அவள் நினைவுகள்
மனவெளியின் சாரல்களில்
நதிப் பெருக்காய்க்
குதித்து வரும்
அடையாளமோ அது!

சுவரிலொரு சித்திரத்தில்
அலைகடலின் மீதிலொரு
தனிப்பறவை சிறகசைத்து
தேடுகின்ற வெறுங்கோலம்!
நான் இங்கே
அவள் எங்கோ?
என் நினைவின் தளர் சிறகு
அலைந்தலைந்து தடுமாறும்
அறிகுறியோ அது?

அறிவை அழைக்கின்றேன்
உணர்வுக் குதிரைகளைக்
கடிவாளம் இடவென்று!
அறிவின் பிடரியிலோ
அக்குதிரைக் குளம்படிகள்!

தொலை தூரத்தெங்கிருந்தோ
வேனல் கொளுத்துகின்ற
வெம்பரப்பின் நடுவிருந்து
காட்டுப் பூ மணக்கிறது-
நினைவுகளின் பிரளயத்தில்
நெற்றி கொதிக்கிறது

வாழ்வின் சிறு ஊஞ்சல்
துயர்க் கரையில் இப்போது!
நினைவுகளே!
நினைவுகளே!
கொஞ்சும் கால் உந்துங்கள்
அக்கரை நான் போகட்டும்!
ஆறுதலின் பசுங் கரையில்
ஏழை மனம் சிறு பொழுது
இளைப்பாற வழி விடுங்கள்

கொஞ்சம் கால் உந்துங்கள்
அக்கரைக்கு
விடை கொடுங்கள்!

□

45

□

அடி பெண்ணே!
நீ என்னை
மறந்து போய் விட்டாய்!

என்னுடைய
வசந்தங்களைக்
கோடையாக்கி விட்டு
யாருடைய கோடைக்கு
வசந்தமாய்ப் போனாய்?

என்னுடைய இரவுகளுக்கு
முதுகு காட்டி
உன் கூந்தலால்
கருமை பூசி விட்டு
யாருடைய இரவுகளுக்கு
முகம் காட்டி
உன் தாமரை விளக்கம்
தாங்கிப் போனாய்?

உனது
தாம்பூலச் சிரிப்பால்
வர்ணம் பூசப்பட்ட என் அறை
இப்போது
பல்லியும் பூச்சியும் நடத்தும்
ஜீவ மரணப் போராட்டக்
களமாகி வெறிச்சோடுகையில்
எந்த ஊரில்
எந்தத் தெருவில்
எந்த வீட்டின் ஜன்னல் கதவுகள்
உன் வளையல் நாதத்தை
வாய் பொத்திக் கேட்கின்றன?

உன் பாதசர ஓசை
சுழன்று சுழன்று தேங்கும்
என் வீட்டு முற்றம்
என் முகம் போலப்
புல் முளைத்துக் கிடக்க

யார் வீட்டு முற்றத்தில்
விதம் விதமாய்க் கோலமிட்டு
விடியலுக்கு
ஆரத்தி எடுக்கிறாய்
நீ ?

□

## 46

□

உன் வேடிக்கைப் பேச்சுக்கள்
நினைவுகளின் கனத்த மடியில்
மோதும் போது
கண்ணீர்க் காம்புகள்
சுரந்து கொள்கின்றன

ஒரு நாள் இரவு
நீ உணவு பரிமாறும் வேளை
பௌர்ணமியைப்
பழிக்குமாறு நீ வார்த்த
தோசையைச் சாப்பிடும் போது
'கடக்' கென்றது ஒரு கல்-
கிடுகிடுத்தது பல்!

நீ சொன்னாய்
'தோசையில் கல் என்று
நினைக்கிறீர்கள்?
நான் என்ன செய்வது

தோசையைக் கல்லில் தானே
சுட வேண்டியிருக்கிறது!'
எனக்கு
மெல்லவும் முடியவில்லை!
சிரிப்பைத்
தள்ளவும் முடியவில்லை!

இன்னொரு நாள்
ஏனோ எனக்குள்
கோபம் கோபமாய் வந்தது
சொற்களாய்ப் பொரிந்தேன்
அப்போது என் பக்கம் நெருங்கி
'உங்களுக்கு
வள்ளல் என்ற பட்டம் தரலாம்'
என்று சொன்னாய்

ஏன் என்றேன்
எரிச்சலுடன்

நீங்கள் தான்
'வள் 'வள்' என்று விழுகிறீர்களே
அதனால் வள்ளல் என்று
சொல்லலாமே' என்றாய்

நான் சிரிப்புக்குத்
தாழ்ப்பாள் இல்லாமல்
தவித்தேன்
நீயோ பன்னீர்ச் செம்பு போல்
குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாய்!

இப்போது
நினைவுகளின் கனத்த மடியில்
மோதும் போது
கண்ணீர்க் காம்புகள்
சுரந்து கொள்கின்றன

□

47

□

நாட்கள் என்ற
முட்கள் கீறிச் சிதைத்த
காயங்களோடு
போராடிக் கொண்டிருந்தேன்

அன்று-
'தம்பி...தம்பி' என்று
ததும்பும் உணர்ச்சி விம்மத்
தோழர் அழைத்ததும்
விரக்திக் கசப்பை
விழுங்கிய படியே
வாசலுக்கு வந்தேன்

தோழர் கையில்
கிழித்த உறையும்
கடிதமும் கண்டு
பச்சைப் புல்லை ஆசையோடு
துழாவிக் கொறிக்கும்
கசாப்புக் கடை
ஆடு போல்
நிச்சயமற்ற ஆர்வம் தூண்ட
அவரை
நெருங்கினேன்

''மல்லிகா கடிதம் தம்பி
மல்லிகா கடிதம்...''
என்று அவர்
சொல்லும் போது
போராட்டக் களத்தில்
தன் லட்சியக் கொடியைப்

பெருமிதத்தோடு பார்க்கும்
உணர்ச்சியின் நெகிழ்ச்சி
தோழரின் முகத்தில்
பட்டொளி வீசிப்
பறந்து கொண்டிருந்தது

கடிதத்தை வாங்க நான்
கை நீட்டும் போது
நொறுங்கிக் கிடந்த என்
சொப்பனத் துண்டுகள்
நெருங்கி இணையும் கவர்ச்சியில்
நெஞ்சம் சிலிர்த்தது

பசித்த குழந்தை
தாய் மார்பு மீது
பாயும் வேகத்தில்
எழுத்துக்கள் மீது
என் விழிகள்
பாய்ந்தன...

தண்ணீர் இருட்டில்
தலை மூழ்குகையில்
மூச்சுப் பைகள்
முட்டி மோதுமே..!
அப்படி உணர்ச்சி
அலைகளில்
ஆழ்ந்தேன்...

அவள்
எழுதியிருந்தாள்...

□

48

□

''வணக்குத்துக்குரிய
என் தந்தையே!
சொந்த ஊரிலிருந்து
கடிதம் எழுதுகிறேன்

சாக்கடைக் கிருமி நான்
என்னை அந்த
உத்தமச் செல்வருடன்
சொர்க்க தேவதைபோல்
சொகுசாய் வாழ
குடும்ப வாழ்வுக்
கொடை நல்கினீர்கள்

அற்பப் புழுவுக்கு
சிறகு தந்தீர்கள்
வற்றாத அன்புத்
தேன் சுரந்தீர்கள்
நான் ஏமாற்றி விட்டேன்
அப்பா! ஏமாற்றி விட்டேன்

அவர்
பளிங்கு மனதுக்கு நான்
களங்கமாய்ப் போனேன்
பூ இதயத்தில் ஒரு
பூச்சியாய் ஆனேன்

என் இனிய கணவர்
—அப்படிச் சொல்ல
எனக்கென்ன யோக்யதை—

கொட்டிய அன்புச்
சர்க்கரைப் பாகில்
சிக்கிய வண்டாய்த்
திக்கு முக்காடிச்
சிலிர்த்துக் கிடந்தேன்...

ஆனல்-
ஊசி விழியால்
ஒதுக்கும் நடையால்
கூசும் நாக்கால்
கொரிக்கும் பேச்சால்
ஊரில் தெருவில்
அவர்-என் தெய்வம்-
நித்தமும் சிலுவை
சுமந்தது
எனக்குத் தெரியும்...

என்னல் தானே
இவருக்குச் சோதனே!
என்னல் தானே
உயிரின் வாதனே!
மன்னவர் எல்லாம்
மறைத்து வைத்திருந்தார்...

அண்டை அயலில் நான்
அருவருப்பானேன்
கொண்டையில் நான் சூடும்
ரோஜாப் பூவும்
அவர்களுக்குத்
தலேயில் வைத்த நெருப்பாயிற்று

பொதுக் குழாயில் நான்
தண்ணீர் பிடித்தால்
அதன் மீதுகூட
விளக்கு மாறிட்டுத்
துலக்கிய பின்னரே
குடும்பப் பெண்கள்
குடம் வைத்தார்கள்

என்ன இருந்தாலும்
வேசி தானே!
சீ! சீ! என்றவர்கள்
இகழ்ந்தது நியாயமே!

இரண்டு பக்கமும் எரியும்
மெழுகு திரியானேன்
தகித்துத் தகித்துச் சுட்ட நெருப்பைச்
சகித்துச் சகித்துப்
பொறுத்துக் கிடந்தேன்
கட்டித் தங்கம்
என் கணவருக்காக...

ஆனால்... ஆனால்..,
சூருவளி போதாதென்று
சுறுமீன் படையெடுக்கலாயிற்று...

அந்தப் பாதகன்
என் முன்னாள் முதலாளி
மோப்பம் பிடித்து விட்டான்

எமதூதன் ஒருவன்
ஒரு நாள்
என்னிடம் வந்தான்

'என்னடி புள்ளே...
மரியாதையா தொழிலுக்கு வந்துடு
இல்லே அவன்-உன் புருசன்-
தெருவிலேயோ சாக்கடையிலேயோ
செருகின கத்தியோட கழுத்தைத்
திருகிக்கிட்டுக் கெடப்பான்

என் வயிற்றில் அலை அலையாய்
அனல் பாய்ந்தது
'அண்ணே, எங்களை விட்டுடு'
என்று கெஞ்சி யழுதேன்
மோதிரத்தைக் கொடுத்தேன்

வஞ்சகனுக்கு வளையலையும்
லஞ்சமாகக் கொடுத்தேன்....

மறுபடியும் வந்தான்
கழுத்துச் சங்கிலியைப்
பறித்துக் கொண்டு போனன்

திரும்பவும் வந்தான்
திகிலடைந்தேன்
கொடுக்க ஒன்றுமில்லை
அவர் உயிருக்கு உலைவைப்பதாய்
அடித்துச் சொல்லிப் போய்விட்டான்

அவர்கள் கொலை வெறியர்கள்
அனுபவத்தால் அறிவேன் நான்

என் கணவரைக் காக்க
என்னையும் காக்க
ஒரே வழி....
ஊரை நோக்கி
ஓடி வந்து விட்டேன்

மன்னியுங்கள் என்னை-
மறந்து விடுங்கள்
என் அன்பான தலைவருக்கு
நல்ல குடும்பத்துப் பெண் பார்த்து
நடத்துங்கள் திருமணத்தை

அம்மா என்னை இங்கு
அலைக்கழிக்கிருள்
ஆனாலும் நான்
'அவர்' மனைவியாகவே
ஆயுளைக் கழிப்பேன்...
மானமின்றி வாழ
மறுபடியும் சம்மதியேன்
இது சத்தியம்...

அவருக்கு என்
சிரந்தாழ்ந்த வணக்கங்கள்
அருள் கூர்ந்து என்னை
ஆகாத கனவு போல்
மறந்து விடுங்கள்...
...உங்கள் மல்லிகா"

□

49

□

மேகம் மூடிக் கிடந்த
ஆவணி மாத வானம்
சற்றே வெளி வாங்கினாற்போல
தோழர் முகத்தில்
புன்னகை விரிகிறது...

,பயந்து போயிருக்கிறாள் தம்பி
இன்றிரவு ரயிலுக்கே போய்
இழுத்து வந்து விடுகிறேன்...
எந்தப் பயல் வந்து
என்ன செய்வான் பார்க்கலாம்'
என்கிறார் தோழர்

அவருக்குத் தான்
எத்தனை பொறுப்புக்கள்
அடுக்கடுக்காய்த் தந்துவிட்டேன்

சாமி மாடு போல்
தலையசைக்கின்றேன்
சாய்வு நாற்காலியில்
கடிதத்தோடு
கண்களை மூடுகிறேன்...

'ஒரு திருமணக் காட்சி
யாரோ ஒருத்திக்கு
மாலை சூட்டி அழைத்து வருகிறேன்

...
அவள்-புதுமனைவி-
சமையல் அறையில் இருக்கிருள்
நீ
புகைப்படத்திலிருந்து
பார்த்துச் சிரிக்கிருய்

நான்
ஆவேசமாய்க் குமுறுகிறேன்...

''அம்மியின் மீது கால் வைக்க
உனக்குக்
கொடுத்து வைக்க வில்லையடி

அதில் தான்
என் மனைவி இப்போது
மிளகாய் அரைக்கிருளே''
...

என் அலறலைக் கேட்டு
தோழரும் மகளும் பதறி வருகின்றனர்
நான் வெட்கமடைந்தேன்

தோழர் பயணமாகிருர்
தொலைவிலிருக்கும்
அவளது ஊருக்கு

என் நெஞ்சம்
அவருக்கு முன்னல்
அந்த ஊரை நெருங்குகிறது...

□

50

□

இருண்ட தெருவில்
அறிமுகமற்ற ஊர்ப்புறத்தில்
மொழி அறியாத குழப்பத்தில்
நூறுநூறு கற்களைத் தாண்டி
எனது நெஞ்சமே!
நீ சென்று நின்ற போது

யாரோ
'கலீரென்று' சிரித்தது போல்
பிரமை!

நெஞ்சமே! அந்த
மாணிக்க தீபச்
சுடரே சிரித்ததோ?
மரகத நீல
விழியே சிரித்ததோ?
அவிழ்ந்த கூந்தல்
மலரே சிரித்ததோ?
அசைந்த அமுதக்
குடமே சிரித்ததோ?

யாரோ
'கலீரென்று' சிரித்தது போல்
பிரமை!

ஒரு வேளை
அது - என்
அறிவாய் இருக்குமோ?
வருங்கால ஏமாற்றத்தை ஏதேனும்
தன் ஒலிக் குறிப்பால்
வரைந்து காட்டியதோ?

□

51

□

ஆசைக்கு பின் மோகம்
மோகத்தைத் தொடர்ந்து காதல்
காதலைத் தொடர்ந்து ஏமாற்றம்
ஏமாற்ற விரல் நுனியில் சோகம்
சோகத்தின் பாதச் சுவட்டில்
துயரம்...குழப்பம்...
அவமானம்...!

ரயில் நிலையத்தில்
அவளும் அவரும்
வருவார்களென்று
காத்துக் கிடந்தேன்

ஓடிக் களைத்த ரயில்
பெருமூச்சில் ஓய்வெடுக்கும்...

கலைந்த தலைகள்
தூக்கமின்றிச் சிவந்த கண்கள்
அவசரச் சாட்டையால்
விரையும் கால்கள்
இல்லை-
நீ இன்னும் வரவில்லை

முகங்கள்
தட்டாமாலையாய் சுற்றுகின்றன
யாரோ மோதுகிறார்கள்
முணுமுணுக்கிறார்கள்

கருவேப்பிலைக் கட்டுகள் அருகே
கருவாடுகள் இறக்கப்படுகின்றன
நீ இன்னும் வரவில்லை

ஈ மொய்க்கும் ஒரு
ஈயக் குவளையை நீட்டி
பிச்சை கேட்கிறது ஒரு கரம்
நானோ உன்
புன்னகைப் பிச்சைக்காகக்
காத்துக் கிடக்கிறேன்

எப்போதும் தாமதமாக வரும் ரயில்
நேற்று மட்டும் உன்னை விட்டு
நேரத்துக்கு முன்பே கிளம்பிவிட்டதா?
நீ இன்றும் வரவில்லை

ரயில் நிலையப் பிளாட்பாரம்
தாய் மடியாய் என்னைத்
தாங்கிக் கொண்டது
சொட்டுச் சொட்டாய் உதிரும்
குழாய் நீர் எனது
சோகத்தைச் சிறிது
பாகம் கேட்டது

ஒரு நீலப் பூச்சேலை
சரசரத்தது
திரைப்பட அரங்கின்
இடைவேளை விளக்குப் போல்
பளீரிட்டன என் கண்கள்
ஓ! எவளோ மலையாளத்தில்
பறைந்து கொண்டு போனாள்

இல்லை நீ வரவில்லை
இன்றும் வரவில்லை...

நான் காத்திருக்கிறேன்
அடுத்த ரயிலுக்காக-
எனது மயிலுக்காக...

□

52

□

மழை கசங்கிக் கசங்கிப்
பெய்து கொண்டிருந்தது
இரவெல்லாம்

விழிப்பும் கனவுமாய்ப்
புரண்டு கொண்டிருந்தேன்

''என் கவிதையைத்
தூக்கிலிட்டது யார்?''
என்று அலறினேன்

உயிரற்ற ஜடமாய் அது
ஊசலாடிக் கொண்டிருந்தது

விழிகள் பிதுங்க
ஓங்கரித்து ஓலமிட்டேன்
''யார் அது?
என் கவிதையைக்
கொன்றது யார்?''

வெளுத்துக் கிடந்த அதன்
ஊமைக் குரூர
உதடுகளைப் பார்த்து
உறைந்து போன என்
அடி நாக்கு
வார்த்தைக் கோணல்களில்
சிக்கிக் குழைந்தது
என் க..வி. தையை...

அடைக்கப்படாத என்
அறையின் ஜன்னல்

கிறீச்சிட்டுத் திறந்தது-
என்ன பயங்கரமான கனவு!

வெளியே
ஆத்திரத்தில் குமுறி அடங்கும்
பைத்தியக்காரனின்
வசைச் சொற்கள் போல
தேய்ந்து தீனக் குரலில்
ஓய்ந்து கொண்டிருக்கும்
மழை...

பாலில் ஊறிய
ரொட்டியைப் போல்
விடிகாலையின் முகம்
அழுதழுது
கனத்துப் பருத்திருந்தது

கதவைத் திறந்ததும்
காத்துக் கொண்டிருந்த
முரடனைப் போல்
குளிர்
என் கன்னத்தில் அறைந்தது

கூட்டத்தில் துழாவும்
ஜேப்படிக்காரன் விரல்கள் போல்
தோட்டத்தை என்
விழிகள் துழாவின

இரவின் கன மழையால்
பலாத்கரிக்கப்பட்ட
மல்லிகைப் பந்தல்
நிலைகுலைந்து கவிழ்ந்து கிடந்தது

மழைச் சரங்களைக்
கழுத்தில் மாட்டிக் கொண்டு
தூக்கிலிடப்பட்ட ஒரு
வெள்ளை மல்லிகைப் பூவின் சடலம்

மெல்ல மெல்ல
பூமியைப் புதைத்துக் கொண்டிருந்த
தண்ணீர்க் கல்லறையில்
ஒரு எரி நட்சத்திரமாய்
உதிர்ந்து மறைந்தது
....

மழையில் முழுக்காடியபடியே
இல்லை-தள்ளாடியபடியே
தோழர் வீட்டில் நுழைந்தார்

மௌனமாய் ஒரு
பத்திரிகைப் பக்கத்தை மட்டும்
என் பக்கம் நீட்டினர்
புகைப் படத்தோடு
செய்தி பேசியது:

''விபச்சாரத் தொழிலில்
ஈடுபட
தாய் வற்புறுத்தியது
தாங்காமல்
இளம் பெண் மல்லிகா
தூக்கிட்டுத் தற்கொலை!...''

□

53

□

இரண்டு நாட்களுக்குப் பின்
நான் கண் விழித்த போது...
மருந்துப் புட்டிகளும்
மாத்திரைப் பெட்டிகளும்
என்னைச் சுற்றிலும்
காட்சி தந்தன

மேசையருகில்
புத்தகத்தைப் புரட்டியபடி
இரண்டு விழிகள்
என் மீது ஓடித்திரும்பியபடி
தோழரின் மகள் கல்பனா
அமர்ந்திருந்தாள்

நான் விழிப்புற்ற தறிந்து
பரபரப்போடு அருகில் வந்து
'அப்போது உங்களுக்கு டாக்டர்
கொடுத்த மயக்க மருந்து-
இப்போது தான்
விழிப்பு வந்தது...'
என்று மெல்ல மொழிந்தாள்

...நான்
தேறி எழும் வரை
வாரங்கள் வழுக்கி நகர்ந்தன

ஒவ்வொரு நாளும்
ஒவ்வொரு நொடியும்
தோழரின் மகள்
எனக்குத்
தோளாய்த் திகழ்ந்தாள்...

உபசரிக்கும் போது
அவள் ஓர் ஊமை
உரையாடும் போதோ
கூரிய ஊசி!

''மல்லீ...மல்லீ என்று
புலம்புகிறீர்களே
சொல்லுங்கள்-
உங்களைப் போலப்
பெண்களின் உடலை
விலை பேசும் ஆண்களால் தானே
விபரீதங்கள்...' என்றாள்

மௌனமானேன் நான்
மறுபடியும் அவள்
சொல்லம்பு தொடர்ந்தது...
''ஒரு மல்லிகாவுக்கு
ஊன்று கோலாக முனைந்தீர்கள்
தெரு மல்லிகைகள்
எத்தனை ஆயிரம்
தெரியுமா?'' என்றாள்

''அதற்கு
நான் என்ன செய்யட்டும்?''
என்று அசடு வழிந்தேன்

''கனவும் காதலும் மட்டும்
யாரையும் காப்பாற்றாது
கனல் வேண்டும்-
மனதில் லட்சியக்
கனல் வேண்டும்'' என்றாள்

அப்போது நான்
பதிலேது மற்றவனாய்
எதிரிலிருந்த சுவரை
ஏறிட்டு வெறித்தேன்

அங்கே-
கொஞ்சும் மலர்களோடு மொய்த்த
பிஞ்சு மழலைகள் நடுவே
மாமேதை லெனின்
வசீகரமாய்ப்
புன்னகைத்துக் கொண்டிருந்தார்!

□

54

□

மெதுவாக இதமாக
என் மனக் காயங்கள்
ஆறத் தொடங்கின

தோழரின் இல்லம்
வாசக சாலையாய்
நூல் நிலையமாய் என்னைப்
புதுப்பித்துப் புதுப்பித்துப்
புதுப்பித்துக் கொண்டிருந்தது

எனக்குள்
'புதுப்பித்து' ஒன்று
புஷ்பிக்கலாயிற்று

நித்தமும் தோழரால்
புதிய உலகங்களுக்கு நான்
யாத்திரை போனேன்

கலை இலக்கியத்தில்
வாழ்வுச் சரிவுகளில்
நிலை குலைந்த பெண்மை என்
நினைவுகளைச் சிராய்த்தது

தோழர் சொன்னார்
''பொருளாதிக்கச் சமூகத்தில்
கருகிப் போன
கவின் மலர்கள்
பெண்கள்...

புரட்சி பூத்த
லெனின் திருநாட்டில்
விலைமகளிருக்கும்
விடுதலைகள் பூத்ததனல்

பாரதியின் புதுமைப்பெண்
பாரதத்தில் இல்லை
தூரத்தில் சோவியத்தில்
சுடராய் ஒளிர்கின்ருள்

வானவெளியில் கூட
வலம் வந்துலாவுகிருள்''

மெல்ல மெல்ல நான்
அவர் வசமானேன்...

தோழரோடு
தொழிற் சங்கப் பணிகள்
கல்பனு வோடு
கலந்து தொடங்கினேன்

மல்லிகா எனக்குள்
மந்திர சக்தியாய் நிறைந்தாள்

குறிப்பாய்-சிறப்பாய்
பெண் விடுதலைக் கிளர்ச்சிகளில்
உரிமைப் போர்க் களங்களில்
தொண்டனுக தொண்டனுக என்
பணிகள் தொடர்ந்தன...

தோழரின் மகள் செல்லும்
தூய பயணத்தில்
துணையாய் நடந்தேன்

மாணிக்கச் சுடராய்த்
தவழும் கொடிநிழலில்
நாங்கள் இப்போது
சக யாத்திரிகர்கள்
இணைப் பயணிகள்!

□

55

□

கல்பனுவும் நானும்
கலந்துரையாடும்
காட்சியைக் காணும் போதெல்லாம்
கண்கள் சிமிட்டித்
தோழர் மொழிவார்

''தோழரே!
நினைவில் வையுங்கள்
இரண்டு கண்கள்
இரண்டு கண்களில்
மயங்கிக் கிடப்பது
அல்ல வாழ்க்கை!
நான்கு கண்கள்
ஒரே திசைவழியில்
நோக்கி நிற்பதே
லட்சிய வாழ்க்கை...''

நானும் தோழர் மகளும்
இதனைக்
கவனமாய்க் கேட்கிறோம்
மெல்ல நகைத்துக் கொள்கிறோம்

□

56

□

கதையை முடிக்கு முன்
என்
சுமையை இறக்கு முன்
ஒரே ஒரு வார்த்தை

இப்போது எங்களுக்கு இல்லை
மௌன மயக்கங்கள்

ஏனெனில்
எங்களை இணைத்திருப்பது
சமூக விடுதலை இயக்கங்கள்!

□□□



## கவிஞரின் நூல்கள்

நிலவுப் பூ

சிரித்த முத்துக்கள்

ஒளிப் பறவை

சர்ப்ப யாகம்

புன்னகை பூக்கும் பூனைகள்

மகாகவி பாரதி—மதிப்பீடுகள்
(தொகுப்பு நூல்)

---



சிற்பி அச்சகம் பொள்ளாச்சி

# சிற்பி

## மௌன மயக்கங்கள்

□□□

உணர்வு தடுமாறும் என்
கடைசி நாட்களிலும் கூட
அந்த உயிரோவியம் செல்மாவையும்
அந்த லெபனுன் தேசத்துத் தேவகவி
கிப்ராணையும் என்னுல் மறக்க முடியாது...

கிப்ரானின் முறிந்த சிறகுகளைப் போல்
என் தாய் மொழியில் ஒரு வசன காவியத்தை —
அமர காவியத்தைப் படைக்க வேண்டும்
என்று பல நாட்கள் பரபரத்திருக்கிறேன்...
ஒரு நாள் ஆசையாய்ப்
படைத்தும் பார்த்தேன்.

இதோ... சிற்பி ஊனுருக உயிருருக
'மௌன மயக்கங்களைப்' படைத்து விட்டார்
சிற்பி ஜெயித்து விட்டார்...

— கவிஞர் மீரா